ஆண்டு 17 இதழ் 09

# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஏப்ரல்-2023 விலை ரூ. 25



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

* அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்....

04 அயோத்தி: மதங்களைக் கடந்த மனிதநேயம்
**அ. இருதயராஜ்**

13 மூன்று அநாதைகள்
**அ. முத்துலிங்கம்**

17 முயங்கொலிக் குறிப்புகள் 2
**கயல்**

20 பொய்த்தேவு
**இந்திரா பார்த்தசாரதி**

23 இளம் நாடக ஆசிரியர்களுக்கான அறிவுரை
**டென்னஸ்ஸி வில்லியம்ஸ், தமிழில்: ஸிந்துஜா**

37 சிறுகதை
**ஆதி பார்த்திபன்**

46 முரசொலி மாறனை மறக்க முடியுமா?
**தினகரன் ஜெய்**

49 குன்றத்தூர் சங்கதி
**விட்டல்ராவ்**

54 கண்டிய அரச வரலாறும் பிரசன்ன விதானகேயின் Gaadi-ம்
**இளங்கோ**

59 நண்பகல் நேரத்து மயக்கம்: காணாமல் போனவனும்....
**அ. ராமசாமி**

64 அச்சுறுத்தும் தண்ணீர் நெருக்கடி!
**பிரபு திலக்**

## அயோத்தி

# மதங்களைக் கடந்த மனிதநேயம்

அ. இருதயராஜ்

நீண்ட நாட்களுக்கு பிறகு ஒரு நல்ல தமிழ் திரைப்படம் பார்த்த அனுபவம். காரணம், 'அயோத்தி' திரைப்படம் எடுத்துக்கொண்ட கதைக்களம், மையக்கருத்து, பார்வையாளர்களோடு ஒன்ற வைக்கின்ற ஒளிப்பதிவு, நெஞ்சை வருடுகின்ற ஆழமான வசனங்கள், மனித உணர்வுகளை துல்லியமாக பதிய வைக்கக்கூடிய இசை - எல்லாம் சிறப்பாக அமைந்துள்ளது. திரைப்படம் ஒரு காட்சி ஊடகம் என்ற வகையில், அந்தந்த காலகட்டத்தில் நடந்த சம்பவங்களையும் நிகழ்வுகளையும் சீர்தூக்கி பார்த்து, அதை ஆழமாகவும் அழுத்தமாகவும் பதிவு செய்கின்ற வேலையை சிறப்பாக செய்திருக்கின்து. மதம், சடங்குகள் சம்பிரதாயங்கள், பாரம்பரியம், மூட பழக்க வழக்கங்கள் இவை அனைத்திற்கும் மேலாக தியாக உணர்வும் மனிதாபிமானமும் உயர்வானது என்பதை உரக்கச் சொல்லுகின்ற படமாக 'அயோத்தி' அமைந்திருக்கின்றது. எனவேதான் இது குறித்து பேசவும் சிந்திக்கவும் விவாதிக்கவும் நாம் முயற்சி எடுக்கிறோம்.

'அயோத்தி' எந்தவிதமான வணிக ரீதியான விஷயங்களுக்கும் முக்கியத்துவம் கொடுக்காமல் எடுக்கப்பட்டிருக்கின்றது. முழுக்க முழுக்க கதையும் கதை சொல்ல வருகின்ற செய்தியும்தான் இங்கே மையமாக இருக்கின்றது. இந்த வகையில், நவீன தமிழ் சினிமா வரலாற்றில் பல படங்கள் முத்திரை பதிக்கின்றதாக இருந்திருக்கின்றன. அந்த வரிசையில் 'அயோத்தி' திரைப்படமும் ஆழமான தாக்கத்தையும் பாதிப்பையும் ஏற்படுத்துகின்ற ஒரு மைல் கல்லாக அமையக்கூடியது.



### உணர்வுகளைத் தொடும் அழுத்தமான திரைக்கதை

படத்தின் பெயரைப் பார்த்த உடனே பார்வையாளர்கள் சற்று குழப்பம் அடைவார்கள். 'அயோத்தி' என்ற பெயரை தாங்கி இருப்பதால், ஓர் அரசியல் படமாகவோ அல்லது அயோத்தியில் பாபர் மசூதி இடிக்கப்பட்டு ராமர் கோவில் கட்டுகின்ற பிரச்சினையை மையமாக கொண்டதாகவோ இருக்கும் என்கின்ற சந்தேகத்தோடுதான் நானும் திரையரங்கத்திற்குள் சென்றேன். அதற்கேற்ற வகையில் படமும் வட மாநிலத்தில் உள்ள அயோத்தியில்தான் தொடங்குகிறது. ஆனால், பத்து நிமிடங்கள் கழித்து அப்படியே திரைக்கதை மதுரை மற்றும் ராமேஸ்வரத்திற்கு நகர்கின்றது.

அயோத்தியில் வசிக்கும் ஒரு நடுத்தர குடும்பம். கணவன், மனைவி, மகள், மகன் என்று வாழ்கின்ற அந்த குடும்பத்தில் பல்ராம் (யாஷ்பால் ஷர்மா) என்பவர் குடும்பத் தலைவராக இருக்கிறார். இவர் கோவிலுக்கு அருகில் பூமாலை விற்கின்ற ஒரு பாரம்பரியமிக்க இந்து மதத்தைச் சார்ந்தவர். இந்து மத சடங்குகளையும் சம்பிரதாயங்களையும் மிக இறுக்கமாக கடைபிடிக்கின்றனர். அதோடு ஆணாதிக்கத்தின் உச்சத்திற்கே சென்று, அவர் சொல்வதும் அவர் நினைப்பதும்தான் குடும்பத்தில் நடக்க வேண்டும் என்று நினைக்கின்ற ஒரு பிற்போக்குவாதி. மனைவி, பிள்ளைகளை அன்பால் அல்ல அதிகாரத்தால், அறியாமையால் அடக்கி ஆளுகின்ற ஆணாக இருக்கிறார். வீட்டிற்கு வந்தாலே மனைவி, பிள்ளைகள் எல்லோரும் நடுங்கக் கூடிய வகையில் அவருடைய



சொல்லும் செயல்பாடும் நடத்தையும் இருக்கின்றது.

தீபாவளியன்று குடும்பத்தோடு இராமேஸ்வரத்துக்கு புனிதப் பயணம் மேற்கொள்வதற்கான ஏற்பாடுகளைச் செய்கிறார், பல்ராம். மதுரை வரை எந்த பிரச்சினையும் இல்லாமல் பயணித்தவர்கள், மதுரையில் இறங்கியவுடன் பிரச்சினைகளைச் சந்திக்க ஆரம்பிக்கிறார்கள்.

மதுரையிலிருந்து வாடகை டாக்ஸி எடுத்துக்கொண்டு ராமேஸ்வரம் நோக்கி செல்லுகின்ற பொழுது, பலராமின் ஆணவத்தாலும் அடாவடித்தனத்தாலும் ஓட்டுநரோடு மோதல் போக்கு ஏற்படுகிறது. ஒரு வாடகை காரில் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பது கூட அவருக்கு தெரியவில்லை. மிகவும் அநாகரிகான முறையில் பான்பராக்கை வாயில் போட்டு எச்சிலை துப்புவது, ஏசி இல்லையா என்று மிரட்டுவது என காரில் பயணிக்கின்ற எல்லோரையும் எரிச்சலுக்கு உள்ளாக்குகிறார். “இன்னும் வேகமாக போ” என்று ஓட்டுநரை அதட்டுகிறார். பல்ராம், தன்னை இந்தியில் அசிங்கமாகத் திட்டுவதை அறிந்த ஓட்டுநர், வண்டியை ஓட்டிக்கொண்டே கடுமையான வாக்குவாதத்தில் ஈடுபடுகிறார். ஓர் இடத்தில் வாக்குவாதம் முத்திப் போகவே, பலராம் ஓட்டுநரைக் கன்னத்தில் அடித்து விடுகிறார். எனவே, இருவருக்கும் ஓடுகின்ற வண்டியில் சண்டை ஏற்பட்டு விபத்து ஏற்படுகின்றது. இதற்கு ஓட்டுநர் எந்த விதத்திலும் காரணம் இல்லை.

ராமேஸ்வரத்திற்கு சென்று தெய்வத்தை வழிபட வேண்டும் என்ற நோக்கத்தோடு செல்கின்ற வழியில் தெய்வ உருவில் இருக்கின்ற மனிதனை மதிக்கத் தெரியாத மனிதனை திரையில் பார்க்கிறோம். இந்த விபத்து ஏற்பட்டதற்கு தெய்வம் காரணமா அல்லது மனிதர் காரணமா என்ற கேள்வி கூட மனதில் எழுகின்றது.

கார் விபத்தில் பலத்த காயம் ஏற்பட்டு பல்ராம் மனைவி இறந்துவிடுகிறார். மனைவி இறந்துவிட்டாள் என்கின்ற சோகம் கூட பல்ராம் முகத்தில் இல்லை. பிள்ளைகள் மட்டுமே அழுது கொண்டிருக்கின்றனர். அவருடைய எண்ணமெல்லாம் இறந்த மனைவியின் உடலைத் தன்னுடைய சொந்த ஊருக்கு எடுத்துச் சென்று அவளுடைய ஆன்மா சாந்தியடையுமளவுக்கு அடக்கம் செய்ய வேண்டும் என்பதைச் சுற்றியே வட்டமடிக்கிறது. அப்படி செய்தால் அவள் மோட்சம் அடைவாள் என்கின்ற எண்ணம்தான் அவருக்கு மேலோங்கி இருக்கிறது.

விபத்தில் இறந்த மனைவி உடலை, உடற்கூராய்வு

செய்து, பின்பு எம்பாம் செய்து, விமானத்தின் வழியாக இறந்த உடலை அயோத்திக்கு எடுத்துச் செல்ல வேண்டும். அங்கேயும் பல்ராம் வாக்குவாதத்தில் ஈடுபடுகிறார். இறந்த உடலை எடுத்துச் செல்லுகின்ற இந்த பயணத்தில் அவர்கள் சந்திக்கும் சவால்களும் பெற்ற உதவிகளும்தான் ஒட்டுமொத்த படம்.

தமிழ்நாட்டில் பல்ராம் குடும்பத்துக்கு உதவ முன்வருகின்ற நபர்கள் ஒவ்வொருவரும் தமிழில்தான் பேசுகிறார்கள். என்றாலும், படம் முழுவதும் பல்ராமின் குடும்பத்தினர் இந்தி மொழியில் தான் பேசுகிறார்கள். இது அவர்கள் உணர்வு தளத்திற்குள் நாம் எளிதில் செல்வதற்கு உதவுகின்றது. ஒருவேளை அவர்கள் ஹிந்தியில் பேசாமல் தமிழிலேயே பேசியிருந்தார்கள் என்றால், நாம் படத்தோடு ஒன்றியிருக்க முடியாது. ஹிந்தியில் பேசுகின்ற வடமாநிலத்தவரும் இவ்வளவு ஆழமாக உணர்வுகளை வெளிகொணறும் வகையிலே இயல்பாக நடித்திருக்க முடியாது.

படத்திலே காட்சிக்கு காட்சி அழுகையும் துன்பமும் கண்ணீரும் வெளிப்பட்டாலும் அதற்கு இணையாக இன்னொரு பக்கம் மக்கள் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். தீபாவளி கொண்டாட்டத்தில் பட்டாசுகள் வெடித்துக் கொண்டிருக்கின்றன. மனித வாழ்விலே மகிழ்ச்சி ஒருபுறம் இருக்கின்றது. துன்பம் இன்னொரு புறம் சமமாக பின்தொடர்ந்து வந்துகொண்டே இருக்கின்றது. இப்படி துன்பம், மகிழ்ச்சி இரண்டையும் பக்கத்தில் பக்கத்தில் காட்டுவது திரைக்கதைக்கு வலுவூட்டுகிறது.

திரைக்கதையில் மரணம் ஒரு மையமான செய்தியாக இருக்கிறது. முன்பின் தெரியாத மனிதர்களின் உதவி பாதிக்கப்பட்ட குடும்பத்தைத் தாங்கிப் பிடிக்கிறது. இதன்மூலம் மதங்களைக் கடந்த மனித நேயம் தான் எல்லாவற்றுக்கும் மேலானது என்பதை திரைக்கதை ஆழமாகச் சொல்கிறது.

### ஆணாதிக்கமும் மத சம்பிரதாயங்களும்

ஆணாதிக்கத்திற்கும் மத சம்பிரதாயங்களுக்கும் நெருங்கிய தொடர்பும் உறவும் இருக்கின்றது என்பதை இந்த திரைப்படம் நமக்கு உணர்த்துகிறது. அயோத்தியில் பூமாலை கட்டி, அங்கு வருகின்ற பக்தர்களிடம் விற்கிற ஒரு சாதாரண பூவியாபாரிதான் பல்ராம். மிகவும் பிற்போக்குத்தனமானவர். பூ வாங்க வருகின்ற சாதாரண மனிதர்களிடம் கடமையாகப் பேசுகிறார்; ஆனால், அங்கு வருகின்ற கோவில் பூசாரியிடம் சிரித்து பேசுகிறார். அவர் வீட்டிற்கு வருகின்ற பொழுது முகத்தை இறுக்கமாக வைத்திருக்கிறார். வீட்டில் பல்ராம் சொல்வது மட்டும்தான் நடக்க வேண்டும். அவர் நினைத்ததை மட்டும்தான் மனைவியும் இரு பிள்ளைகளும் செய்ய வேண்டும். மனைவி அவரைப் பார்த்து நடுங்குகிறார். பிள்ளைகள் அப்பா வந்தவுடன் பயத்திலும் பீதியிலும் இருக்க வேண்டிய சூழல். தெய்வத்தை வழிபடுவது, நேர்ச்சை செய்வதற்காகப் புனிதப் பயணம் மேற்கொள்வது என்று அனைத்தையும் தீர்மானிக்கிறவராக அவரே இருக்கிறார்.

சகமனிதர்களின் உணர்வுகளை புரிந்துகொள்ளாத ஒரு மனிதன், தெய்வத்திற்கு எப்படி நெருக்கமாக இருக்க முடியும்? அல்லது தெய்வத்திற்கு செய்கின்ற எல்லா செயல்களையும் எப்படி சரி என்று சொல்வது? ஆனால், அவரது அப்பாவி மனைவி, தன்னுடைய கணவன் ராமேஸ்வரம் சென்று புனித நீரில் குளித்தால், ஒரு வேலை மாறுவான்; அவன் நல்ல மனிதனாக வாழ்வான் என்கின்ற ஆசையை தன்னுள் கொண்டிருக்கிறாள். அவளது எல்லா ஆசையும் கனவும் விபத்தில் முடித்து விடுகின்றது.

வைதீக மதங்கள் அனைத்தும் பெண்ணை அடிமைப்படுத்துவதற்கான பல்வேறு கூறுகளை வழிபாட்டுக்குள்ளும் சடங்குகளுக்குள்ளும் வைத்திருக்கின்றன. ஒரு பெண் கோவில் கருவறைக்குள் நுழைய முடியாது. அவள் பூப்படைந்தவுடன் கோவிலுக்குள்ளேயே வரக்கூடாது. மாதவிடாய் காலங்களில் தெய்வத்தை வழிபடக்கூடாது என்ற பல்வேறு சட்டதிட்டங்களை பெண்களுக்கு மட்டும் உருவாக்கி வைத்திருக்கின்றன. அதிலும் குறிப்பாக கணவனை இழந்த மனைவி, விதவை என்கின்ற நிலையை ஏற்றபின் அவளின் நிலைமையோ இன்னும் மோசமாக இருக்கிறது. வீட்டில் நடக்கின்ற நல்ல வைபவங்களுக்கு கூட அவள் செல்ல முடியாது. கணவன் இறந்த பிறகு அவளுக்கு உணர்வுகள் கிடையாது. வாழ்க்கையே கிடையாது என்கின்ற ரீதியிலே அவளை சமூகம் மைய நீரோட்டத்திலிருந்து ஒதுக்கி வைக்கிறது.

சொந்த மனைவி, பிள்ளைகள் என்றாலும்கூட ஆணாதிக்கதிமிர் கொண்ட ஒரு ஆண், அவர்களுடன் எவ்வளவு மோசமாக நடந்துகொள்கிறார் என்பதை அந்த குடும்பம் மதுரையில் இறங்கியவுடன் பல்ராம் நடத்தையில் பார்க்க முடிகின்றது. நீண்ட பயணத்துக்கு பின் கழிப்பறைக்குச் செல்ல வேண்டும் என்று மகள் சொல்லுகின்றாள். அதற்கு தாயும் தயக்கத்துடன் பரிந்துரை செய்கின்றாள். ஆனால், தந்தை, 'கோவிலுக்கு போகிறதுக்கு முன்பாக ஏன் இப்படி நடந்துகொள்கிறீர்கள். நாம் விடியும் முன்பு இராமேஸ்வரம் செல்ல வேண்டும். கொஞ்சம் அடக்கிக்கொள்ள வேண்டும்' என்று சொல்லி வற்புறுத்தி அவர்களை காரில் ஏற்றுகிறார். ஒரு கழிப்பறைக்குச் செல்லுகின்ற சுதந்திரம்கூட பெண்ணுக்கு இல்லை என்பதை அழுத்தமாக அந்த காட்சி பதிவு செய்கின்றது. அதேபோல மனைவி இறந்த உடனையே, 'அவளின் உடலை உடற்கூறாய்வுக்கு அனுப்பக்கூடாது. மத முறைப்படி மனித உடம்பில் கத்தி படாமல், அறுபடாமல் ஈமச்சடங்கு செய்ய வேண்டும். அப்பொழுதுதான் அவளின் ஆன்மா சாந்தி அடையும்' என்பதில்தான் அவர் கவனம் செலுத்துகிறார். மனைவி இறந்ததைப் பற்றிய



கவலையைவிட, மத சடங்குகளின் படி அவள் உடல் அடக்கம் செய்யப்பட வேண்டும் என்பதிலேயே அவர் குறியாக இருக்கிறார். அதற்காக அயோத்தியில் உள்ள ஒரு பூசாரியோடு தொடர்புகொண்டு பேசுகிறார்.

மனைவி உடலில் எந்த கத்தியும் படாமல்தான் அவள் எரிக்கப்பட வேண்டும் என்பது அவரது மத சாஸ்திரம். எனவே, அதை மனதில் வைத்துக்கொண்டு உதவி செய்த செய்ய வந்த சசிக்குமாரிடமும் அவருடைய நண்பர்களிடமும் பல்ராம் சண்டை போடுகிறார். உடற்கூறாய்வு செய்யக்கூடாது, மத சாஸ்திரப்படிதான் உடல் எரிக்கப்பட வேண்டும் என்று இவர் பேசுவது அறிவாளி போலவும், உதவி செய்ய வந்தவர்கள் முட்டாள் போலவும் தான், நமக்கு தோற்றம் அளிக்கும்.

தன்னுடைய மனைவி உடலை விமானத்தின் மூலம் எடுத்து செல்வதற்கு, மொழி தெரியாத ஊரில் அவர் கையறு நிலையில் இருக்கிறார் என்பதை ஒருபோதும் அவர் உணரவில்லை. இதுதான் மேட்டிமைத் தனத்தின் உச்சகட்டம்.

ஒரு வழியாக பேசி உடற்கூறாய்வு முடிகிறது. பின்னர் உடலைப் பெற்றுக்கொண்டு பிணச்சீராய்க்கு அனுப்ப வேண்டும். அப்பொழுதுதான் அதை விமானத்தில் ஏற்ற முடியும் என்பதை மருத்துவர்கள் சொன்ன பிறகும் அங்கேயும் சண்டை போடுகிறார்.

‘உடற்கூறாய்வு செய்ததால் மிகப்பெரிய பாவம் செய்துவிட்டேன்; இப்பொழுது பிணச்சீராய்க்குச் சம்மதிப்பதன் மூலமாக இன்னும் கூடுதலான பாவம் செய்வேன்’ என்று வாதாடுகிறார். கோபத்தில் கத்துகிறார். நீங்கள் எல்லாம் பைத்தியக்காரர்கள் என்று எல்லோரையும் திட்டுகிறார். என்னுடைய மனைவியின் ஆன்மா எப்படி சாந்தியடையும்? அவள் எப்படி பரலோகம் போவாள்? என்பது தான் அவருடைய கவலையாக இருக்கின்றது. மனைவி இறந்தது அல்ல, அவள் எப்படி அடக்கம் செய்யப்பட வேண்டும் என்பதுதான் அவருடைய கவலை. அந்த இடத்தில் மகள் வெடித்து கிளம்புகிறாள்.

முடிந்தவுடன் கடைசியாக எல்லோரும் முகத்தை பார்த்த பிறகு சவப்பெட்டியை மூட வேண்டும். அதற்கு முன்பாக ராமேஸ்வரம் கொண்டுவந்த தீர்த்தத்தை தெளித்து விடுகிறார். இதிலே இயக்குநர் படம் பார்ப்பவர்களின் சென்டிமென்டை தொட்டுச் செல்கிறார்.

### மரணம் கற்றுத்தரும் வாழ்க்கை பாடம்

எல்லா மனிதருக்கும் பிறப்பு இருப்பது போல இறப்பும் நிச்சயம் இருக்கின்றது என்பதை மனிதன் மறந்து செயல்படுகிறான். ஆனால், ஒரு நாள் மரணம் அவனுடைய வாழ்நாள் முழுவதும் கற்றுக்கொள்ள முடியாத பாடங்களைச் சொல்லித் தந்துவிட்டு போகிறது.

தெய்வத்தைத் தேடித்தான் அவர்கள்

இராமேஸ்வரத்திற்கு புனித பயணம் மேற்கொண்டார்கள். ஏன் அவர்கள் விபத்தில் மாட்டிக்கொள்ள வேண்டும்? பாசத்திற்குரிய அம்மாவை இழந்து நிற்கும் இரண்டு பிஞ்சு உள்ளங்கள்; மொழி தெரியாத ஊரில் எப்படி இறந்த பிணத்தை தன்னுடைய சொந்த ஊருக்கு கொண்டு செல்ல முடியும் என்கின்ற தத்தளிப்பு அங்கே வெளிப்படுகிறது. ஆனாலும், அம்மாவின் உடலை சொந்த ஊருக்கு கொண்டு செல்வதற்கு உதவ வருகின்றவர்களிடம் எல்லாம் சண்டை போடுகின்ற அப்பாவின் முரட்டுத்தனம். இது எல்லாமே புரிந்துகொள்ள முடியாத புதிராக இருக்கின்றது. திசை தெரியாத ஒரு சூழலில் அந்த மரணம் முன்பின் தெரியாத மனிதர்களை ஒன்றிணைக்கின்ற பாலமாக இருக்கின்றது. அவள் தன்னுடைய மரணத்தின் மூலமாக கணவனுக்கு பாடம் புகட்டுகிறாள்.

குடும்பத்தோடு ராமேஸ்வரத்திற்கு கிளம்புகின்ற பொழுது எல்லாம் நன்றாக அமையும் என்ற எண்ணம்தான் அவர்களிடத்தில் இருந்திருக்கும். இடையில் இப்படி ஒரு விபத்தை சந்தித்து, அதில் ஜானகி இறந்து போவாள் என்று ஒருபோதும் யாரும் நினைத்திருக்க மாட்டார்கள். அந்த மரணத்துக்கு வழிவகுத்தது பல்ராமின் அரக்கத்தனமான செயல்பாடுதான். மனித வாழ்வில் இப்படி சின்ன சின்ன தவறுகளால்தான் பெரிய மரணங்களை சந்திக்க வேண்டிய சூழல் அமைந்து விடுகின்றன.

வயது முதிர்ந்து, உடல் நோய் கண்டு, மருத்துவ சிகிச்சை பலனின்றி இறப்பதை ஓரளவுக்கு புரிந்துகொள்ள கூடியதாக இருக்கின்றது. ஆனால், ஒரு தனி மனிதனின் ஆணவ போக்கால், கட்டுக்கடங்காத கோபத்தின் காரணமாக, கிறுக்குத்தனமாக நடந்து கொள்வதன் வழியாக மரணத்தைத் தேடிக்கொள்வதை ஒரு போதும் ஏற்றுக்கொள்ள முடியாது. அந்த காரில் பயணிக்கின்ற பொழுது, பல்ராம் ஓட்டுநரோடு இயல்பாக பழகி இருந்தால், மரியாதையாக நடத்தி இருந்தால், சண்டை போடாமல் இருந்திருந்தால், விபத்து நடந்திருக்கவே முடியாது. மரணம் நடந்திருக்காது. மனிதன் தெரிந்தே செய்கின்ற தவறான செயல்களாலும் திமிர் பிடித்த எண்ணங்களாலும்தான் விபத்தையும் மரணத்தையும் ஏற்படுத்திக்கொள்கிறான் என்பதையும் இந்த படம் நமக்கு புரிய வைக்கிறது.

விபத்தில் ஏற்பட்ட அந்த மரணம்தான் பல்வேறு நல்ல விஷயங்களையும் நமக்கு கற்றுத் தருகிறது. முன்பின் தெரியாத ஊரில், மொழி தெரியாத அந்த ஓட்டுநரின் நண்பர் சசிகுமார் தான் உதவிக்கு ஓடி வருகிறார். காரில் பயணித்த பலராமின் தவறுதலால்தான் விபத்து நடந்தது என்பதை அறிந்தும் அந்த பிள்ளைகளின் முகத்தை பார்த்து உதவி செய்ய முன்வருகிறார். ஒரே நாளில் அவர் எடுக்கின்ற முயற்சியில்தான், இறந்த உடலுக்கு எல்லா விதமான மருத்துவ ரீதியான சம்பிரதாயங்களையும் முடித்து, விமானத்தில் அனுப்ப முடிகிறது. மதங்களைக் கடந்த மனித நேயம் அங்கே உயர்ந்து நிற்கின்றது.

மருத்துவ சம்பிரதாயங்களை முடிப்பதற்கு அப்பா மீண்டும் மீண்டும் தடையாக இருக்கிறார் என்று தெரிந்த உடனேதான் மகள் வெடித்து கிளம்புகிறாள். அப்பாவை பிடித்து தள்ளி, "வாழும்போது எங்க அம்மாவை நிம்மதியா வாழ விடவில்லை. செத்த பிறகு அவருடைய சாந்தியை பத்தி பேசறதுக்கு உனக்கு என்ன தகுதி இருக்கிறது? ஓட்டுநரை வேகமாக ஓட்டு வேகமாக ஓட்டு என்று சொல்லி கலவரத்தை ஏற்படுத்தியது நீதான். எங்க அம்மாவ கொன்றது நீ தான். ஒரு கணவனா, ஒரு அப்பாவா எங்களுக்கு என்ன செஞ்சிருக்கீங்க? யாருன்னு தெரியாத இவங்க காலையிலிருந்து நமக்கு உதவி செஞ்சுட்டு இருக்காங்க. வாய மூடிட்டு ஓரமா ஒதுங்கி உட்காருங்க. எங்க அம்மாவை நாங்க கூட்டிட்டு போகிறோம்" என்று தைரியமாக பேசும் அவளுடைய வார்த்தைகள் அற்புதமானவை. அவை நெஞ்சை தொடுகின்ற வகையில் இருக்கின்றது.

அந்த தருணத்தில்தான் பல்ராமும் யோசித்துப் பார்க்கிறார். தன்னுடைய அரக்கத்தனத்தை அப்பொழுதுதான் கொஞ்சம் கொஞ்சமாக புரிந்துகொள்ள முயற்சிக்கிறார். மனைவியின் சடலத்துக்கு முன்னால் மண்டியிட்டு கதறி அழுகிறார். அந்த அழுகையில் தன்னுடைய மனைவியின் மரணம் குறித்து யோசிக்கிறார். மனைவியின் மரணத்திற்கு முன்னால் அவருடைய ஆணாதிக்க சிந்தனை, அடாவடித்தனம், முரட்டுத்தனம், பிற்போக்குத்தனம் எல்லாம் சுக்கு நூறாய் உடைகிறது. ஒரு மரணம் மிகப்பெரிய பாடத்தை கற்றுத் தருகிறது.

**மனித வாழ்வின் கையறு நிலை**

ஒவ்வொரு மனிதருடைய வாழ்விலும் மேடு பள்ளங்கள் இருக்கின்றன. கஷ்டங்களும் நஷ்டங்களும் வந்து போகின்றன. துன்பங்களைச் சந்திக்கிறோம். தோல்விகளைச் சந்திக்கிறோம். இவற்றோடு அடுத்து என்ன செய்வது என்று தெரியாமல் விழி பிதுங்கி நிற்கின்ற நிலையையும் சந்திக்கிறோம்.

பல்ராமின் குடும்பம், முன்பின் தெரியாத ஊரில், புதிய ஒரு இடத்தில், உதவி செய்ய யாருமே இல்லாத ஒரு சூழலில், ஒரு கையறு நிலையைச் சந்திக்கிறது. எந்த முடிவும் எடுக்க முடியாத நிலையில் இருக்கின்றனர். இந்நிலையில், தன்னுடைய நண்பன் ஓட்டி வந்த கார் விபத்துக்குள்ளானது என்பதை தொலைபேசி வழியாக தெரிந்துகொண்ட சசிக்குமார் அவனுக்கு உதவி செய்ய மருத்துவமனைக்கு ஓடி வருகிறார். புகழ் என்ற இன்னொரு நண்பனோடு மருத்துவமனைக்கு வந்த அந்த நேரம் முதல், பல்ராம் குடும்பத்தினர் நிலை பார்த்து, அவர்களை விமானத்தில் அனுப்புவது வரை, அன்றைய நாள் முழுவதும் பம்பரமாக சுழன்று இருவரும் உதவி செய்கிறார்கள். பல்வேறு தடைகளைச்

சந்திக்கிறார்கள். அந்தத் தடைகளில் இருந்து மீண்டு வருவதற்கான வழிகளையும் தேடுகிறார்கள்.

அன்றைக்குதான் தீபாவளிக் கொண்டாட்டம். வீட்டிலிருந்து நண்பர்களோடு தீபாவளியைக் கொண்டாடியிருக்கலாம். அவர்களுக்கு எவ்வளவோ முட்டுக்கட்டைகளும் முரண்பாடுகளும் வந்து முன்நிற்கின்றன. அதேநேரம், இது சாத்தியம் இல்லை என்ற சூழல் வருகின்ற போதும், அடுத்து நல்லது நடப்பதற்கும் உதவிகளை பெறுவதற்குமான வாய்ப்பு இருந்துகொண்டே இருக்கின்றது என்பதையும் திரைப்படம் அழுத்தமாக பதிவு செய்கின்றது. மனிதன் தன்னுடைய கையறு நிலையிலிருந்து மீண்டு வருவதற்கு உதவ நல்ல மனிதர்களும் தாராள மனம் கொண்டவர்களும் இருக்கிறார்கள் என்பதை தெளிவாக காட்டுகிறது. இதன்மூலம் இந்த உலகம் இன்னும் எவ்வளவு அழகானது என்பதை படம் சுட்டிக்காட்டுகிறது.

இறந்த ஜானகியை உடற்கூறாய்வு செய்து, மருத்துவ ரீதியான சம்பிரதாயங்கள் எல்லாம் முடித்து, அவர்களை விமானத்தின் மூலம் சொந்த அனுப்புவதற்கு ஒரே நாளில் ஏழு வகையான சான்றிதழ் பெற வேண்டும் என்பது ஒரு சவால். அடுத்து அவர்களுக்கு விமான டிக்கெட் முன்பதிவு செய்வதிலே சிக்கல். சவப்பெட்டி கொண்டு வருவதில் பிரச்சினை. உடல்கூறாய்வு (Post-Mortem) முடித்தவுடன், பிணச்சீராய்வு (Embalming) செய்வதற்கு தடைகள்.. இப்படி பல இருக்கின்றன. எத்தனை எத்தனைத் தடைகளை அவர்கள் தாண்டி வரவேண்டி இருக்கிறது.

**மத அடையாளத்தை மறைத்துவிட்டு, துன்பத்தில் இருக்கின்ற மனிதனுக்கு இன்னொரு மனிதன் சுத்தமான மனிதாபிமானத்தின் அடிப்படையில் உதவுகிறார் என்பதை மட்டுமே முன்னுறுத்திய விதம் பாராட்டுக்குரியது.**

உதவி செய்ய வந்தவருக்கு ஏன் இவ்வளவு துன்பங்கள் என்கின்ற கேள்வி கூட பார்வையாளர் மனதில் எழலாம். ஆனால், அப்படிப்பட்ட சவால் மிக்க சூழலிலும் கையறு நிலையிலும் நம்பிக்கை பிரகாசமாக வெளிப்படுகின்றது. ஏனென்றால், ஒவ்வொரு தடையும் ஏற்படுகின்ற பொழுதும் அதற்கு நேர் மாறாக உதவி செய்வதற்கும் பலர் முன் வருகின்றனர் என்பதுதான் படத்தின் மிகப்பெரிய பலமாக இருக்கிறது.

தீபாவளி தினத்தன்று உதவி செய்ய முன்வருகிற மருத்துவர்கள், சான்றிதழில் கையெழுத்திடுவதற்கு வருகின்ற மருத்துவமனை டீன், சவப்பெட்டியை இலவசமாக கொண்டு வந்து தருகின்ற அந்த தனி மனிதர், தன்னுடைய புது பைக்கை விற்றுவிட்டு அவர்களை அனுப்பிவைப்பதற்காக செலவழிக்க முன் வருகின்ற சசிக்குமாரின் நண்பன்; கடைசியிலே ஒருவர் தான் விமானத்தில் பயணிக்க முடியும் என்கின்ற நிலையில், யாராவது இருவர் விட்டுக் கொடுத்தால் அவர்களுக்கு பதிலாக இந்த இறந்த குடும்பத்தில் இருவர் பயணிக்க முடியும் என்ற நிச்சயமற்ற சூழலில், தாராளமாக முன்வந்து தங்களுடைய டிக்கெட்டில் அவரகளை பயணம் செய்ய சொல்லுகிற அந்த மூத்த தம்பதியர்; இப்படி எல்லோருமே மாமனிதர்களாக நம் முன்னே காட்சியளிக்கிறார்கள். இவர்கள் எல்லோருமே மனிதநேயத்தின் மகத்துவத்தை உணர்ந்தவர்களாகவும் பிறரன்பை உணர்ந்தவர்களாகவும் இருக்கிறார்கள்.

### படத்தில் வெளிப்படும் மதநல்லிணக்க கூறுகள்

மதங்கள் மனித வாழ்க்கையை பண்படுத்துவதற்காக உருவாக்கப்பட்டது. மனித வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக வாழ்வதற்கும் அதை இன்னும் மேம்படுத்துவதற்கும்தான் மதங்கள் உதவ வேண்டுமே ஒழிய மனிதர்களை பிரிக்கக்கூடாது என்று தான் எல்லோருமே விரும்புகிறார்கள். ஆனால், மதத்தின் அடிப்படையில் சண்டைகளை மூட்டுவதற்கும் பிரிவினையை ஏற்படுத்துவதற்கும் ஒரு சில சித்தாந்தங்கள் தொடர்ந்து சதி வேலைகளில் ஈடுபடுகின்றன. இதை முறியடிக்கிற வகையிலே, மக்கள் தங்கள் வாழ்வியல் சூழலில் ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டு, சமாதானத்துடனும் அன்பு உறவுகளுடனும் வாழ்கிறார்கள் என்பதற்கு பல்வேறு உதாரணங்கள் இன்னும் இருந்துகொண்டு தான் இருக்கின்றன.

குறிப்பாக அடித்தட்டு மக்கள் மத்தியில் மதங்களைக் கடந்த மனிதநேயம் இயல்பாக வெளிப்படுகின்றது. இந்துக்கள், இஸ்லாமியர்கள், கிறிஸ்துவர்கள் என்று எல்லோரும் இணக்கமான வகையிலே வாழ்வதை நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம். மத விழாக்களின் போது மற்ற மதத்தவர்களுக்கு உணவு பரிமாறுவதும் இனிப்பு வழங்குவதும், வீட்டு நிகழ்வுகளில் மதம் கடந்து கலந்துகொள்வதும் இன்னும் தொடர்ந்து நடைபெறுகிறது.

'அயோத்தி' படத்திலும் இந்த மத நல்லிணக்கம் மிக அருமையாக வலியுறுத்தப்படுகின்றது. அது மறைமுகமான செய்தியாக இருந்தாலும் ஆழமான செய்தியாக இறுதியிலே வெளிப்படுகின்றது. அயோத்தியில் இருந்து வந்த ஒரு இந்து குடும்பத்துக்கு, பலராமின் முரட்டுத்தனம் - பிடிவாதம் எல்லாம் கடந்து உதவும் சசிக்குமார், தான் எந்த மதத்தைச் சார்ந்தவன் என்பதை கடைசி வரை வெளிப்படுத்தாமல் இருந்தது இன்னும் கூடுதலான பெருமையை படத்துக்கு சேர்க்கிறது. பாரம்பரியமிக்க ஒரு இந்து குடும்பத்தில் இருந்து வருகின்ற பல்ராமுக்கு, ஒரு இஸ்லாமியர் உதவி செய்ய முன்வருகிறார்

என்று தெரிந்திருந்தால், அங்கே இன்னும் சண்டை கடுமையாக இருந்திருக்கும். சசிகுமார் உதவியைக்கூட அவர் நிராகரித்து இருக்கலாம். மத அடையாளத்தை மறைத்துவிட்டு, துன்பத்தில் இருக்கின்ற மனிதனுக்கு இன்னொரு மனிதன் சுத்தமான மனிதாபிமானத்தின் அடிப்படையில் உதவுகிறார் என்பதை மட்டுமே முன்னுறுத்திய விதம் பாராட்டுக்குரியது.

கடைசியில் விமானத்தில் ஏறுவதற்கு முன்பாக கண்ணீரோடு பல்ராம் சசிகுமாரைப் பார்த்து உன் பெயர் என்ன என்று கேட்கின்ற பொழுதுதான் சசிகுமார், "அப்துல் மாலிக்" என்று சொல்லுவார். உடனே பல்ராம் கண்ணீர் மல்க ஓடி வந்து அப்துல் மாலிக்கை கட்டி அணைப்பார். அப்போது, 'அன்பு மொழி பேசும் போது எல்லாம் மாறுமே' என்ற பாடல் வரி ஒலிக்கும். உடனே பலராமின் மகள், அடுத்த வருடம் நாங்கள் ராமேஸ்வரத்திற்கு வருவோமா என்பது தெரியவில்லை. ஆனால், அப்துல் மாலிக் அண்ணாவை பார்ப்பதற்கு கண்டிப்பாக வருவோம் என்று அழுதுகொண்டே சொல்லுவாள். பார்வையாளர்கள் எல்லோருடைய கண்களிலும் கண்ணீர். மதங்களைக் கடந்த மனிதநேயமே மகத்துவமானது என்பதை 'அயோத்தி' படம் அருமையான வகையில் நிரூபிக்கிறது.

**அ. இருதயராஜ் சே.ச** <iruraj2020@gmail.com>



(தொடர்ச்சி 13ஆம் பக்கம்)

# மூன்று அநாதைகள்

அ. முத்துலிங்கம்




ஆப்பிரிக்காவிலுள்ள ஒரு வறிய குக்கிராமம். அங்கே வந்த ஜேர்மன் சுற்றுலாவாசியிடம் கட்டுக்கட்டாக ஜேர்மன் காசு இருந்தது. வயிற்றிலே பசி. சாப்பிடுவதற்கு ஏதாவது கிடைத்தால் உயிரைக் காப்பாற்றலாம். ஜேர்மன் காசைக் கிராமவாசியிடம் கொடுத்தார். அவர் அதை தூக்கி சூரியவெளிச்சத்தில் உயர்த்திப் பரிசோதித்துவிட்டு திருப்பிக் கொடுத்தார். கிராமவாசிக்கு அது வெறும் தாள்தான். ஆனால், அதன் மதிப்பு ஜேர்மனியில் 20 பேர் சாப்பிடலாம். மொழியும் அப்படித்தான். எப்படித்தான் கற்றறிந்த விஞ்ஞானியாக இருந்தாலும் உணவு வேண்டும் என்று சொல்வதற்கு அவர் மொழி பயன்படவில்லை. எழுத்துஇல்லாத, உலகத்தில் 2,000 பேர் மட்டுமே பேசும் அந்தக் கிராமத்தாரின் மொழிதான் பயன்படும். ஆகவே, அவர்கள் கிராமத்தில் உயர்ந்த மொழி எது? அவர்கள் பேசும் மொழிதான். உலகிலே பசிக்கு மொழி கிடையாது. அந்தப் பசியை எந்த மொழிக்காரரும் ஆற்றலாம்.



பல வருடங்களுக்கு முன்னர் நியூயோர்க் நகரில் நடந்த விழாவில் ஒருவர் இந்தச் சம்பவத்தை விவரித்தார். நாம் அங்கே கூடியிருந்தது முக்கியமாக (ஜோஸ் ஆண்ட்ரெஸ்) Jose Andres என்பவரின் உரையை கேட்பதற்கு. அதி உன்னதமான சமையல் கலைஞர் அவர். உலகின் எந்தப் பகுதியிலும் பேரிடர் நேரும்போது அங்கே உதவி வழங்க முதல் ஆளாக நிற்பார். உணவு வழங்குவதுதான் அவர் செய்யும் தொண்டு. உணவு பக்கெட்டுகளை ஹெலிகொப்டரில் இருந்து கீழே வீசுவதல்ல. அவர் வேலை

உணவை சமைத்து வழங்குவது. ஹைட்டியில் புயல் அடித்தபோது அங்கே முதலில் நின்றவர் அவர்தான். அவர் சேவையை பாராட்டி வெள்ளை மாளிகை விருது அளித்திருக்கிறது. உலகத்தின் உயர்ந்த 100 சாதனை மனிதர்களில் ஒருவராக இவரை 'டைம்' இதழ் தேர்ந்தெடுத்திருக்கிறது.

அவருடைய பேச்சு இன்னும் மனதில் நிற்கிறது. அவர் மேடையில் ஐந்து நிமிடம் மட்டுமே பேசினார். 'ஒரு மனிதருக்கு ஒரு தட்டு உணவு' என்றார். பசிக்கு மொழி இல்லை. இனம் இல்லை. சாதி இல்லை. நிறம் இல்லை. எங்கே ஒருவருக்கு பசிக்கிறதோ அதை தீர்க்க வேண்டியது மனிதரின் மேலாய கடமை. You give food, you give life. உணவுதான் மனிதனுக்கு உயிர் கொடுப்பது. இவர் World Central Kitchen (உலக சமையல்கூடம்) என்ற அமைப்பின் மூலம் ஆதரவற்றவர்களுக்கு உணவு வழங்கி வருகிறார்.

ஒரு வருடம் முன்பு 24 பிப்ரவரி 2022 அன்று உக்ரைன் மீது ரஸ்யா படை எடுத்தபோது அங்கு முதலில் போனது ஹூஸே அண்டெரஸ் மற்றும் அவரின் உலக சமையல்கூடத் தொண்டர்கள்தான். உலகத்தின் பல பாகங்களிலும் இருந்து ஆயிரக் கணக்கானவர்கள் இணைந்துகொண்டார்கள். இவர்களில் ஒருவர் பெயர் டொன் ஸ்டூவர்ட். இருபது வருடங்களுக்கு முன்னர் அமெரிக்காவில் அவரைச் சந்தித்திருக்கிறேன். உலக சமையல் கூடம் எப்படி இயங்குகிறது என்பதை அறிய இவரைத் தொடர்புகொள்ள முடிவு செய்தேன்.

ஒரு நடுத்தர அமெரிக்க குடும்பத்தில் பிறந்தவன் டொன். அவனுடைய தாயும் தகப்பனும் கார் விபத்தில் இறந்து போக நான்கு வயதிலேயே டொன் அனாதையானான். அவனுக்கு வேறு சொந்தம் கிடையாததால் ஒரு தம்பதி அவனைத் தத்தெடுத்து வளர்த்தார்கள். இந்த தம்பதிகள் தங்கள் வாழ்க்கையை தொண்டு செய்வதில் அர்ப்பணித்தவர்கள். டொன்னையும் சிறுவயதில் இருந்தே சேவை செய்யும் ஆர்வம் கொண்டவனாக வளர்த்தார்கள். பெரியவன் ஆனதும் உலகில் எங்கே எப்படியான உற்பாதம் நடந்தாலும் அங்கே போய் தன்னால் முடிந்த உதவிகளை செய்வான்.

அண்டெரஸ் நடத்திய சமையல் கூடத்தில் டொன் தொண்டராக அவ்வப்போது வேலை செய்தான். 'பத்திரிகைகள் எழுதுவதுபோல உண்மை யிலேயே அண்டெரஸ் உலகத்தின் அதி சிறந்த சமையல்காரரா' என்று கேட்டேன். டொன் இப்படி பதில் சொன்னார்: 'எனக்கு தெரியாது. ஆனால், அவர் என்ன சமைத்தாலும் அது சுவையாக இருக்கும். இதைக் கொண்டுவா, அதைக் கொண்டுவா என்று கேட்கமாட்டார். எது இருக்கோ அதை வைத்து சமைப்பார். ஆனால், உணவின் ருசி அபாரமாக இருக்கும். சில உணவுக்கு பெயரே கிடையாது. உடனேயே தனக்கு அந்தக் கணம் தோன்றிய ஒரு பெயரை சூட்டுவார். சிலர் சொல்கிறார்கள் அவர் தண்ணீரும் நெருப்பும் இல்லாமல் சமைப்பதில் வல்லவர் என்று. அப்படி சமையல்காரர்கள் வரலாற்றில் இருந்ததாக நான் படித்ததுண்டு.'

உக்ரைன் போர் தொடங்கியபோது டொன் தான் செய்த வேலையை துறந்தார். வளர்ப்பு பெற்றோரிடமும் நண்பர்களிடமும் பணம் திரட்டிக்கொண்டு உக்ரைனுக்குப் பயணம் செய்து உலக சமையல் கூடத்தில் சேர்ந்தார். அவர் போனபோது அங்கே ஏற்கனவே ஆயிரக்கணக்கான தொண்டர்கள் வந்து குவிந்துவிட்டார்கள்.

'உங்கள் தினசரி வேலை என்ன?' என்று டொன்னிடம் கேட்டேன். 'சமையல் வேலைதான். அதிகாலையில் சமைக்கத் தொடங்கிவிடுவோம். பின்னர் சமைத்த உணவை வரிசையாக வழங்குவோம். உடல் உழைப்பு மட்டும்தான் எங்களுடையது. திட்டமிடுவது எல்லாம் எனக்கு மேலே இருப்பவர்கள். சில சமயம் உணவை வண்டிகளில் ஏற்றிக்கொண்டு இன்னொரு உணவு வழங்கும் இடத்துக்கு போக நேரிடும். அது அபாயமான பணி. போகும் வழியில் என்னவும் நடக்கலாம்.'

'நீங்கள் சமைக்கும் இடத்தில் ஆபத்து இல்லையா?'

'ஆபத்து இல்லாத இடம் என ஒன்றுமே இல்லை. கீழே பெரிய பங்கர்கள் இருக்கும். அபாயச் சங்கு ஊதியதும் அங்கே போய் ஒளிந்துகொள்ள வேண்டும் என்பது கட்டளை. மீண்டும் வந்து வேலையை விட்ட இடத்திலிருந்து தொடங்குவோம்.'

'நீங்கள் காலை நேரம் அகதிகளுக்கு சூப் வழங்கும்போது அவர்கள் வரிசையாக வந்து வாங்கிச் செல்வார்கள் அல்லவா? அதில் ஒரு படம் எனக்கு அனுப்பி வைக்க முடியுமா?' என்றேன். அவரும் அனுப்பி வைத்தார். அதைப் பார்த்த எனக்கு ஆச்சரியமா அல்லது ஏமாற்றமா என்பதை வர்ணிக்க முடியாது. யார் சூப் வழங்குகிறார்கள், அதை யார் பெறுகிறார்கள் என்பது தெரியவே இல்லை.

அகதிகள் என்றால் கிழிந்த ஆடைகளுடன், கலைந்த தலைமுடியுடன் கசங்கிய மேல்கோட்டு அணிந்து நிற்பார்கள் என்று நினைத்தேன். அனைவருமே சிறந்த ஆடை அணிந்து நல்ல காலணிகளுடன் கௌரவமான தோற்றத்தில் வரிசையில் ஒழுங்காக நின்றார்கள். உணவு வழங்குபவர்களும் நேர்த்தியான ஆடைகளுடன் காணப்பட்டார்கள். எனக்கு ஏமாற்றம்தான். நான் அவருக்கு எழுதினேன், 'இதில் யார் உணவு கொடுக்கிறார், யார் பெறுகிறார்?' அவர் பதில் அனுப்பினார். இடது பக்கம் இருப்பவர்கள் கொடுக்கிறார்கள். வலது பக்கம் நிற்பவர்கள் அகதிகள்.

'சிகப்பு சட்டை அணிந்து சிரிக்கும் இளம்



பெண்ணின் கணவன் உக்ரைன் ராணுவத்தில் இணைந்து போர்புரிகிறான். இந்தப் பெண் சமையல் கூடத்துக்கு தினம் வந்து உதவுவார். ஒரு குறிப்பிட்ட நேரம் ஒவ்வொரு நாளும் அவரை கணவன் டெலிபோனில் அழைத்துப் பேசுவார். அந்தக் கணம் அவள் கணவன் உயிருடன் இருக்கிறான் என்பதில் மகிழ்வாள். அடுத்த கணம் சோகத்தில் ஆழ்ந்துவிடுவாள். ஆனால், நேரம் தப்பி ஏதாவது தொலைபேசி வந்தால் கெட்ட செய்தி என்று பதைத்து விடுவாள். தினம் தினம் இந்தப் பெண் செத்துப் பிழைப்பதை நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.'

'நீங்கள் அங்கே சமையல் செய்த காலத்தில் நடந்த ஏதாவது ஒரு சம்பவத்தை எனக்கு கூறமுடியுமா?' டொன் அப்பொழுது வேலையில் மும்முரமாக இருந்தார். அடுத்தநாள் அவர் ஓய்வாக இருக்கும் சமயம் அழைப்பதாகச் சொன்னார். ஆனால், அவருடைய அழைப்பு வரவில்லை. அவரை வேறு சமையல் கூடத்துக்கு மாற்றி விட்டார்கள். பின்னர் சிலகாலம் அவரை தொடர்புகொள்ளவே முடியவில்லை.

ஒருநாள் மாலை அவரிடம் இருந்து தொலைபேசி வந்தது.'நீங்கள் ஒரு சம்பவம் கேட்டீர்களே அது கடந்த வாரம் நடந்தது' என்று சொல்லத் தொடங்கினார்.

அவர் வாழ்ந்த அதே ரோட்டில் வசித்த ஒரு மூதாட்டி பற்றிய சம்பவம். அந்த வீட்டில் மூதாட்டியும் அவருடைய 10 வயதுப் பேரனும் மட்டுமே. அவர் துணிச்சலான கிழவி. அபாயச் சங்கு ஊதினால் கீழே போய் பங்கரில் ஒளிந்துகொள்ள மாட்டார், ஆனால், பேரனை மட்டும் விரட்டுவார். சிலநாட்களில் அபாயச் சங்கு நாளுக்கு பத்து தடவை ஒலிப்பதும் உண்டு. இவர் ஒருபோது கீழே போனது கிடையாது.

ஒரு நாள் ரஸ்யப் படை ரோட்டிலே அணிவகுத்து போனபோது இவர் நடுரோட்டில் போய் நின்று உக்ரைன் மொழியில் திட்டினார். அவர்கள் எச்சரித்தும் இவர் அசையவில்லை. பீரங்கி வண்டிகளும் ஆயுதம் தாங்கிகளும் படைவீரர்களும் காத்து நிற்க இவர் நடுரோட்டில் நின்று கத்தினார். பக்கத்து வீட்டுக்காரர்கள் பாய்ந்துபோய் அவரை உள்ளே இழுத்து வந்தார்கள். பலமுறை இப்படி நடந்தது. ஏன் அப்படிச் செய்தார் என்று கேட்டால் அவர் சொல்வார். 'இது என் நாடு. என் ரோட்டிலே நான் நிற்கிறேன். என்னைப் போ என்று உத்தரவிட இவர்கள் யார்?' என்பார். அவரை காப்பாற்றியவர்கள் சொல்வார்கள், 'நீ பெரிய துணிச்சல்காரிதான். உனக்கு உக்ரைன் அரசாங்கம் விருது கொடுக்கப் போகிறது. நீ சுடுபட்டு இறந்தால் உன் பேரனை யார் காப்பாற்றுவார்கள். அதை யோசி.' அவர்




அதைக் கேட்டதாகவே காட்டிக்கொள்ளவில்லை.

ஒருநாள் அபாயச் சங்கு ஊதியது. எல்லோரும் பங்கருக்குள் சென்று பதுங்கிக்கொண்டார்கள். மூதாட்டியின் வீட்டின் மேல் குண்டுவிழுந்து இவர் இறந்துபோனார் ஆனால், பையன் பிழைத்துவிட்டான். 'பையனுக்கு என்ன நடந்தது?' என்று கேட்டேன். டொன் பிறகு சொல்கிறேன் என்றார். அதன் பின்னர் பலநாள் தொடர்பில்லை. நானும் அடிக்கடி அழைத்து தகவல் விட்டபடியே இருந்தேன்.

பல நாட்களாக அவர்கள் ஊர்விட்டு ஊர் மாறிக்கொண்டே இருந்தார்கள். ஒருநாள் டொன்னிடமிருந்து தொலைபேசி வந்தது. அவர் குரலில் உற்சாகம் இல்லை. 'இங்கே இன்றைக்கு இதுதான் பேச்சாக இருக்கிறது. பக்கத்து ஊரில் நடந்தது. ரஸ்ய படை அந்த ஊருக்குள் புகுந்தது. வழக்கம்போல பீரங்கி வண்டி, ஆயுதம் தாங்கி, யந்திரத் துப்பாக்கி வாகனம் என அணிவகுத்த படை. அந்த வீதியில் ஒரு கிழவர் இருந்தார். பழைய போர்வீரர். தன்னுடைய பழங்காலத்து தானியங்கி துப்பாக்கியை எடுத்துக்கொண்டு நடுரோட்டில் வந்து நின்று சுடத்தொடங்கினார். ஒருவருமே எதிர்பார்க்கவில்லை. அந்த அணியில் எரிபொருள் சுமக்கும் வாகனம் ஒன்றும் இருந்தது. அது பற்றி எரிய கணிசமான ஆயுதங்களையும் வீரர்களையும் ரஸ்யப்படை இழந்தது. ஆனால், கிழவர் குண்டு பாய்ந்து இறந்துபோனார். இன்று அதுதான் செய்தி. அந்தக் கிழவரை மக்கள் கொண்டாடுகிறார்கள்' என்றார்.

நான் அடுத்த கேள்வி கேட்கமுன்னர் அவர் டெலிபோனை வைத்துவிட்டார். பல மாதங்களாக அவரிடமிருந்து ஒரு சத்தமும் இல்லை. 24 பிப்ரவரி 2023 உக்ரைன் போர் தொடங்கி ஒரு வருடம் பூர்த்தியான அன்று அவரை அழைத்தேன். அவர் அமெரிக்காவிற்கு திரும்பிவிட்டார். இன்னும் ஒரு வாரத்தில் தான் மறுபடியும் உக்ரைன் போவதாகச் சொன்னார். வீட்டிலே பெரிய சத்தமும் ஆரவாரமுமாக இருந்தது எனக்கு கேட்டது. நலம் விசாரித்துவிட்டு அந்த பத்து வயதுச் சிறுவனுக்கு என்ன நடந்தது என்று கேட்டேன். 'அவன் இங்குதான் என்னோடு இருக்கிறான்' என்றார். 'நீங்கள் தத்து எடுத்து வளர்க்கிறீர்களா?' 'ஆமாம், அவனுடன் இன்னும் இரண்டு சிறுவர்களையும் கொண்டு வந்து சேர்த்துவிட்டேன். என் வீட்டில் இப்போது மூன்று உக்ரைன் மொழி பேசும் அனாதை சிறுவர்கள்' என்றார். 'மூன்று அனாதைகளா?' 'இல்லை, என்னுடன் சேர்த்து நாலு' என்றார்.

'நான் அனாதையாகவாழ்க்கையை ஆரம்பித்தேன். என்னை தத்தெடுத்த வளர்ப்பு பெற்றோர் எனக்கொரு வாழ்க்கையை அமைத்து தந்தார்கள். அவர்களுக்கு நன்றி சொல்லும் முகமாக இந்தச் சிறுவர்களை நான் வளர்க்கிறேன்' என்றார். 'உக்ரைன் மொழி பேசும் வளர்ப்பு பிள்ளைகள் இப்போது ஆங்கிலம் பேசுகிறார்களா?' என்றேன். 'பசிக்கு ஏது மொழி?' என்றார் அவர்.

'அது எல்லாம் சரிதான். எப்படி அவர்களை அமெரிக்காவுக்கு அழைத்து வந்தீர்கள்?' என்றேன். சிலநேரம் மௌனம். 'நீங்கள் இலங்கைக்காரர்தானே?' 'ஆமாம்.' 'உலகிலே அகதிகளை அதிகமாக ஏற்றுமதி செய்வது இலங்கை நாடு. உங்களுக்கு கூடவா தெரியாது?' என்று சொல்லிச் சிரித்தார். நானும் சிரித்தேன்.

நியூயோர்க் நகரில் ஜோஸ் ஆண்ட்ரெஸ் தன் உரையில் உணவு கொடுப்பது ஒருவருக்கு உயிர் கொடுப்பதற்கு சமம் என்று சொன்னது ஞாபகத்தில் வந்தது. You give food, you give life. இரண்டாயிரம் வருடங்களுக்கு முன்னர் புறநானூறுப் புலவர் ஒருத்தர் 'நீர் இன்றி அமையா யாக்கைக்கு எல்லாம் உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்று பாடியிருப்பதை நினைத்தேன். ஸ்பெயின் தேசத்திலிருந்து அமெரிக்காவுக்கு குடிபெயர்ந்த இந்த மனிதர், உலகத்தில் எங்கே பேரிடர் நேர்ந்தாலும் அங்கே முதலில் நிற்பவர், அவரும் அதையேதான் சொல்கிறார்.

**அ. முத்துலிங்கம்** <amuttu@gmail.com>

# முயங்கொலிக் குறிப்புகள்

**கயல்**

ஓவியம்: **நடேஷ்**



## 6
## கணவனின் துணையோடுதானே காமனை வென்றாகவேண்டும்

'பொண்ணு சூசியா இருந்தா
உங்களுக்கெல்லாம் ஆச்சரியமா இருக்கு'
திருமண வெப்சைட் விளம்பரம்
தொலைக்காட்சித் திரையிலோட,
டேம், மிஸ்ட்ரிவைப், லயணஸ், அன்பௌண்ட்....
பார்த்துப் பார்த்துக் கவனமாய்த்
தெர்ந்தெடுத்த ப்ராண்டட் துணைகளைப்
பயணப் பெட்டியில்
நேர்த்தியாக அடுக்குகிறாள்.

'உடல் எப்படி
முன்பு இருந்தப்படி;
மனம் எப்படி
நான் விரும்பும்படி....'
சீழ்க்கையடித்துக்கொண்டே கிளம்புகிற இவளுக்கிருப்பது,

பகலில் கால்மிதியாய்த் தாழ்ந்து
இரவில் படுக்கையாகி உடலதிர வாழ்ந்து
மறுநாள் காலை
மறக்காமல் தலைக்குக் குளித்துக்
காலணா நெற்றிக் குங்குமம் தரித்த
முன்னாள்
மங்கையர்குல தெய்வங்களின்
இன்றைய முகம்.



## 7
## காலம் எனும் காமக் கொல்லி

முயங்கும் வேட்கை
காட்டுத் தழலெனச்
சடசடத்துப் பரவ

படுக்கையைக் கைநீட்டித்
துழாவுகையில் அவனை
வேற்றூரில் இருக்கவைக்கிறது.

இறுக்கக் கட்டிக்கொள்ளவேண்டும்
என்று இருவரில் யாருக்குத் தோன்றினாலும்
அதில் ஒருவர்
விடுபட இயலா பணிவலைக்குள்
சிக்குண்டிருப்பதைத் தவறாமல்
பார்த்துக்கொள்கிறது.

குரல்மட்டும் கேட்டால்கூடப் போதும்
என்கிற சமாதானத் தழையூட்டி
மனதைப் பசியாற்றும்போது
சர்வநிச்சயமாக
அலைபேசியைத் தொடர்புகடந்த
எல்லையில் வைத்துவிடுகிறது.

ஏமாற்றங்கள் தவிர்த்து
எதிர்பார்ப்புகள் குறைத்து
சில நிமிடச் சந்திப்பு,
ஆழ்ந்த நீண்ட அகன்ற நெடிய
முத்தம் என்ற பிசிறில்லாத் திட்டத்தில்
இருவரையும் போக்குவரத்து
நெரிசலில் இருத்துவது.

ஒரு எழவும் வேண்டாம்
என்று ரகசியமாய் நீலப் படம் பார்த்து
நிறைந்து பொங்கி வழிகிற
துல்லிய நொடியில்
இணையை வீடியோ காலில் அழைக்கவைப்பது.

இப்போது
மறுபடி முதலில் இருந்து.....

## 8

உடலெங்கும் பரவிப் படர்கிற
குருதியோட்டம் எனது காமம்;
உதடுவழி மட்டுமே அனுமதிக்கிற
உணவு உன் கிளர்ச்சி.

நினைவுத் தீக்குச்சி உரசலிலேயே
கங்குகள் நெக்குவிடும் தாவரம் என்னுடல்;
சாமத் திரி அமர்த்தி பிறை கீழிறங்கும் வரை
நடக்குமுன் ஊடல்.

அதன் பிறகு நிகழ் சாத்தியமுள்ள
கலவி
பருவந் தவறிய வசந்தமாகக்
கிளைகளைக் குழப்பி
நிறம் வெளிறிய மலர்களையே
புஷ்பிக்கிறது.

ஹலோ மிஸ்டர்
இஃதொரு பெண்ணின் துயரப் பாடல்
என்று கண்டுகொள்ளாமல் கடந்துசெல்லாதே
இதில் ஒலிப்பது உன்னுடைய
குரலும்தான்.

## 9
## புணர்ச்சி விதிகள்

திசைப் பெயர்ப் புணர்ச்சி -
யாரிடமோ ஏதோ சொல்லும் சாக்கில்
செல்லங் கொஞ்சிக் கிடப்பேன்.

இயல்புப் புணர்ச்சி -
நீ ஊரிலிருந்து விரைவில் வருமொழி
கிறங்கடிக்கிறது அலைபேசிச் செய்தி.

பக்கத்தில் அத்தையின் நிலைமொழி
எந்தச் சலனமும் ஏற்படுத்தாததாய் என்னை வெறுமனே
ம் சொல்லவைக்கிறது.

வந்தேவிட்டாய் - தோன்றல்

உன்னைப் பார்க்கக் கூடமெங்கும்
கசகசவென ஆட்கள்
தனிமை - திரிதல்

நண்பர்கள் வீடுகளுக்கெல்லாம் பொருள் தரச் சென்று
நாட்களைக் கழிப்பது காமம் - கெடுதல்.

உடன்படுமெய்
நீ
சாடையில் ரகசியமாய்
உதடசைத்திருந்தாலும்
பிழிந்த துணி உதறாமல்
ஓடி வந்திருப்பேன்.
நீ
15 நாட்கள் விடுப்பில்வந்து
ஊருக்கே உழைத்து



14ஆம் நாள்
யாமத்தில் இழுக்க
கோபத்தில் நான் மறுத்து
மழைக்குத் துள்ளுகிற தவளையொலியாய்
பாய் முறுக்குப் பிரிவது
விகாரப் புணர்ச்சி.

பெரும்பகுதி
விதிக்கப்பட்ட புணர்ச்சிகளே,
வேறென்ன.

## 10

தளிர் வயதில்
மோக நதிகளின் சலசலப்பென எழும்
யாமக் கிசுகிசுப்புகள் கேட்டு வளர்ந்தவள்.

மூடிய கதவுகளின் காதுகளில்
விழாமல்தான் அவளுடைய முத்த ரதமும் நகர்ந்தது
முதல் இரவு தொடங்கி.

திருவிழாக்களின் சாமியாடிகள் நாக்கின்வழி ஒலிப்பது
உள்ளுக்குள் நகர்ந்துகொண்டிருக்கும்
யாரும் கேட்க வாய்க்காத
சொல் மரவட்டைகளின் குரல் போலிருக்கும் அவளுக்கு.

வாக்குவாதங்கள் இழவு வீடுகள்
தெருச் சண்டைகளில்
அதிர ஒலிக்க அனுமதிக்கப்படுகிற அவளுடைய குரலுக்கு
இருந்துகொண்டே இருக்கிறது
இந்தக் கேள்வி.

பூம் பாறைகளினிடையே வழியும்
மலைச் சுனையளவும்
ஓசை எழக் கூடாதா
தன் ஆயுளையே ஒப்படைத்த ஒருவனை ஆரத் தழுவி
சொக்கப் பனையென தகித்துப்
பின்
குளிர்ந்து
உள்மூச்சு மெல்லத் தணிந்து எழுகையில்

(தொடரும்)

**கயல்** <dr.kayalvizhi2020@gmail.com>

# பொய்த்தேவு

இந்திரா பார்த்தசாரதி

நீல வானம். இதமான வெய்யில். இளங்காற்று. புல் தரை. இயற்கையின் அருளில் தோய்ந்து மகிழ்ந்து விளையாடும் மழலைச் செல்வம். அவர்கள் விளையாடுவதைக் கண்டு உவகையில் ஆழ்ந்த பெண்கள், ஆண்கள்.

பொழுது சாயத் தொடங்கியது.

“போகலாம்” என்றான் ஒருவன்.

புறப்பட்டார்கள்.

“இடப்பக்கம் போக வேண்டாம். அங்குதான் அந்தக் குகை இருக்கிறது.”

“எந்தக் குகை?”

“சபிக்கப்பட்ட குகை.”

“புரியவில்லை.”

“ஒரு கோபக்காரத் தெய்வம் சிலரைச் சபித்து அந்த இருண்ட குகைக்குள் அடைத்துவிட்டது.”

“போய்ப் பார்க்கலாமா?”

“வேண்டாம், ஆபத்து.”

“நான் போகத்தான் போகிறேன்.”

“நானும்.”

“நானும்.”

ஐந்தாறு பேர் சேர்ந்து கொண்டார்கள்.

நீண்ட வழி. போய்க்கொண்டே இருந்தார்கள்.

இருட்டிவிட்டது.

“யார் எக்கேடு கெட்டால் என்ன, நாம் போய்விடுவோம்.”

“தப்பு... அவர்களும் நம்மைப் போன்ற மனிதர்கள்தாம்.”

“இருட்டிவிட்டதே!”

“சரி,இன்றிரவு இங்குக் கழித்துவிட்டுக் காலையில் போவோம்.”

“கோபக்காரத் தெய்வம் இங்கு வந்தால்?”

“அந்தத் தெய்வத்துக்கு அதிகார வரம்பு இங்கு இருக்காது.”

அந்த இடத்தில் இரவைக் கழித்தார்கள்.

காலை. சூரிய ஒளி, ‘புல்லை நகையுறுத்தி, பூவை வியப்பாகியது.’ கதிரவன் கீழ் வானத்தில் வண்ணக் கவிதை ஒன்றை எழுதியிருந்தான். பறவைகள்,இரை தேடி, குதூகலமாகப் பறந்து சென்றன.

“உலகம் அற்புதம்.”



“குகை மனிதர்கள் இருக்கும்போது உலகம் அற்புதமா?”

“பூமி என் படுக்கை. ஆகாயம் என் உத்தரம்.”

“குகையில் இன்னும் மனிதர்கள் இருந்து கொண்டுதானிருக்கிறார்கள்.”

“அவர்களை விடுவித்து, உலகைக் கண் விழித்துப் பார்க்கச் செய்வோம்.”

எல்லோரும் மறுபடியும் நடக்கத் தொடங்கினார்கள்.

“குகை அதோ! குகை அதோ!”

இருட்டினால் மூடியிருந்த நீண்ட குகை.

“உள்ளே போகலாமா?”

உடம்பில் ஒட்டும் இருட்டு.

ஒருவர் பின்னால் ஒருவராய் நேர்க் கோட்டில் சென்றார்கள்.

“இராவணன் ஆட்சியில் சூரியன் அவன் அனுமதியுடந்தான் உள்ளே நுழைய முடியுமாம்.”

“இங்குந்தான்.. இது இராவணன் ஆட்சியோ?”

“மெதுவாகப் போங்கள். பழந்தின்னி வௌவால்கள் பறக்கின்றன.”

“இக்குகையின் குடிமக்கள் பழந்தின்னி வௌவால்கள்தாமோ?”

“இருக்கலாம். இருட்டின் ஆட்சியில் வேறு யார் குடிமக்களாக இருக்க முடியும். ஆந்தைகளையும் வௌவால்களையும் தவிர.”

அவர்கள் பேசுவது எதிரொலித்தது.

“இருட்டில் போய்க்கொண்டேயிருந்தால்?”

“வெளிச்சத்தை மறந்துவிடுவோம்.”

“இருட்டை நேசிக்கத் தொடங்கிவிடுவோம். இருட்டே ஞானம்.”

அவர்கள் மேலும் நடந்தார்கள். நடக்க நடக்க குகை மேலும் மேலும் உருவாகிக் கொண்டு இருப்பது போல் தோன்றியது.

“திரும்பி விடலாம்.”

“வைத்த காலைப் பின் வாங்கக்கூடாது?”

“இருட்டில் முன் ஏது, பின் ஏது?”

“கதிரவன் முத்தமிடும் புல்லைப் பார்க்க வேண்டும் போலிருக்கிறது.”

“சூரியனைச் சிறை பிடிக்கும் புல்.”

“இப்பொழுது மலர்கள் சூரிய ஒளியில் நீராடும்.”



"நம்மோடு வர மறுத்தவர்கள் புனலில் குளித்துக் கொண்டிருப்பார்கள்."

"பண்ணிசையாய் அலை பாயும் ஆறு."

"பறந்து கொண்டிருக்கும் புள்ளினங்கள்."

"ஒற்றைக் காலில் தவம் செய்யும் கொக்கு."

"காற்றலையில் சுருதியில் இழியும் குயிலின் சோகம்."

அவர்கள் மேலும் நடந்தார்கள்.

"அதோ இருட்டை முரணும் ஒளிச் சாம்பல்... அதுவா நாம் போக வேண்டிய இடம்?"

அவர்கள் ஸ்தம்பித்து நின்றார்கள்.

ஒரு மெல்லிய திரை குறுக்கும் நெடுக்குமாக இருந்தது. உத்தரத்திலிருந்து தொங்கிய ஒரு சிறு கை விளக்கு.

திரைக்கு அப்பால் பலர் உறைந்து போன நிலையில் நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் நிழல் திரையில் விழுந்து அவர்களைப் பெரும் பூதங்களாகக் காட்டியது.

ஒருவன் திரையைச் சற்று விலக்கி எட்டிப் பார்த்தான்.

அவர்களுடைய கால்களும் கைகளும் இரும்புச் சங்கிலியால் கட்டப்பட்டிருந்தன. கழுத்தில் திரும்ப முடியாத படி இருப்புப் பட்டயம். ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்ள முடியாது. நிழல்களைத் தாம் பார்க்க முடியும். அவர்களைப் பொருத்த வரையில், நிழல்தான் யதார்த்தம்.

நிழல்களை நிஜமாக நம்பச் சபிக்கப் பட்டவர்கள். நிழல்களைப் பார்ப்பதே அவர்கள் வாழ்க்கையின் இலட்சியம்.

என்ன கொடூரமான உள்ளம் அந்தக் கோபக்காரத் தெய்வத்துக்கு இருந்திருக்க வேண்டும்!

அவர்களை இந்நிலையில் கண்டவன் மற்றவர்களுக்குச் சொன்னான். எல்லாரும் எட்டிப் பார்த்தார்கள்.

"அவர்களை விடுவிப்போம்."

"கறுப்புத் தெய்வம்?"

"போராடுவோம்.. அவர்களுடன் பேசிப் பார்ப்போம்."

"நீ பேசு."

"யார் நீங்கள்?"

பதிலில்லை.

மறுபடியும் "யார் நீங்கள்?"

"நீங்கள் யார்?" எதிர் கேள்வி.

"உங்களை விடுவிக்க வந்திருக்கிறோம்."

"அப்படியென்றால்?"

"உங்கள் தளைகளை நீக்க."

"அப்படியென்றால்."

"கையிலும் காலிலும் போடப்பட்டிருக்கும் சங்கிலிகளையும் கழுத்துப் பட்டயத்தையும் நீக்க வந்திருக்கிறோம்.. நாங்களும் உங்களைப் போன்ற மனிதர்கள்தாம்."

"இவைகள் எங்கள் உடம்புடன் பிறந்தவை. எங்கள் அங்கங்கள்."

"இல்லை. இவைகள் உங்களுக்குப் பூட்டப் பட்டவை."

"நம்ப மாட்டோம்.. நீங்கள் சொல்வது பொய்."

"எது நிஜம், எது பொய் என்று உங்களுக்குத் தெரியவில்லை. உங்கள் நிஜ உருவம் உங்களுக்குத் தெரியுமா?"

"அதோ தெரிகின்ற கறுப்பு உருவம்."

"இல்லை. அது தோற்றம். பொய். பயம் உங்கள் கையையும் காலையும் கட்டிப் போட்டிருக்கிறது. உத்தரத்திலிருந்து தொங்கும் விளக்குப் பொய்ப் பிரசாரம் செய்து நிழலை நிஜமெனக் காட்டி உங்களை நம்ப வைக்கிறது."

"இதுவே எங்கள் சொர்க்கம்."

"இதுவே உங்கள் நரகம். உங்களில் ஒருவனை

விடுவிக்கிறோம். அவனே எங்களுடன் வந்து எது உண்மை என்று உங்களுக்கு அறிவிப்பான். சரியா?"

மௌனம்.

"சொல்லுங்கள். இது சரியா?"

மௌனம்.

"யாரும் வரத் தயாராக இல்லையா?"

"எங்கள் கோபக்காரத் தெய்வம் தினந்தோறும் வந்து எங்களுக்கு உணவு கொண்டு வந்து வாயில் ஊட்டுகிறது. விலங்களைக் கழற்றிச் சுத்தம் செய்து மீண்டும் மாட்டுகிறது. இதுவே நாங்கள் பழகிய வாழ்க்கை. எதற்காக உங்களுடன் வர வேண்டும்?"

"சூரிய ஒளி என்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா?"

"அப்படியென்றால்?"

"குளிர்ந்த காற்று என்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா?"

"அப்படியென்றால்?"

"விண்ணில் சுதந்திரமாய்ப் பறந்து திரியும் புள்ளினங்களைப் பற்றி உங்களுக்குத் தெரியுமா?"

"அப்படியென்றால்?"

"கண்ணுக்கு எட்டியவரை பச்சைக் கம்பளமாய் இருக்கும் புல் தரையில் புரண்டு செல்வது பற்றி உங்களுக்குத் தெரியுமா?"

"அப்படியென்றால்?"

"அப்படியென்றால் உங்களில் ஒருவன் என்னுடன் வரட்டும். அவன் புரிந்துகொண்டு மற்றவர்களுக்குச் சொல்வான்."

"நான் வருகிறேன்" என்றான் ஒருவன்.

அவனுடைய தளைகள் அகற்றப்பட்டன. அவன் அவர்களுடன் திரையைத் தாண்டிச் சென்றான்.

அவனால் முதலில் நடக்க முடியவில்லை. தடுமாறினான். அவர்கள் அவனைக் கைத் தாங்கலாய் அழைத்துச் சென்றார்கள்.

குகையை விட்டு வெளியே வந்ததும் அவன் கத்தினான்.

"என்ன இது! கண்களைக் குத்துகின்றது!"

"சூரிய வெளிச்சம்."

அவன் கண்களை மூடிக்கொண்டான்.

"முதலில் அதை அணையுங்கள்".

"அணைக்க முடியாது. இதுதான் இயற்கை."

"என் குகையில் தெரியும் இருட்டுதான் எனக்கு வெளிச்சம்".

"அப்படி நீ பழகிவிட்டாய்!"

"என்ன இது, என் மீது வீசுகிறது?"

"காற்று."

"என் குகையில் வீசுவதுதான் காற்று."

"இல்லை. அது பழந்தின்னி வௌவால்கள் பறப்பதினால் உண்டாகும் புழுக்கம்."

"என்னால் பார்க்க முடிவில்லையே!"

"கொஞ்சம் கொஞ்சமாய்க் கண்களைத் திறந்து பார்."

"என் கை கால்கள் அசைகின்றன. பயமாக இருக்கிறது."

"அசைவதுதான் இயற்கை. இப்பொழுது உனக்குத் தளைகள் இல்லை."

"தளைகள்தான் இயற்கை."

"இல்லை."

"என்னால் உங்களை இப்பொழுது பார்க்க முடிகிறது. ஆனால், வித்தியாசமாகத் தெரிகிறீர்கள்."

"இதுதான் இயற்கை."

"மேலேதெரிவது என்ன?"

"ஆகாயம்."

"இவை?"

"மலர்கள்."

"எத்தனைச் சிறிய உருவம், எவ்வளவு அழகாக ஓடுகின்றன? இவை?"

"அணில்கள்."

"அவை?"

"பறவைகள்."

"ஆஹா! எவ்வளவு அழகாக பறக்கின்றன! இவை?"

"வண்ணத்துப்பூச்சிகள்."

"பார்ப்பதற்கு எவ்வளவு அழகாக இருக்கின்றன!"

"உங்கள் உலகம் அழகாக இருக்கிறது. மனத்தை இன்பத்தில் ஆழத்துகிறது."

"இது உங்களுடைய உலகமும்தான்."

"நான் இதுவரை இருந்தது?."

"குகை. அது உலகமன்று."

"நான் எப்படி அங்குப் போனேன்? எனக்குத் தளையிட்டது யார்?"

"நீயேதான். தவறான தெய்வத்துக்கு அடி பணிந்தாய்."

"அவர்கள்?"

"அவர்களும்தான்."

"புரியவில்லை."

"நீங்கள் அடிபணிவதற்காகவும் பயப்படுவதற்காகவும் உரத்த கோஷங்களை மந்திரங்களாக நினைத்துக் கூவி கூவிப் பொய்த்தெய்வங்களை உருவாக்கிக் கொண்டீர்கள். பொய்த் தெய்வங்கள் பொல்லாத தெய்வங்கள்."

அவன் சிறிது நேரம் சிந்தித்தான்.

அவன் ஆகாயத்தைப் பார்த்தான். காற்றைச் சுவாசித்தான்.

முகத்தில் மலர்ச்சி.

"வாருங்கள். அவர்களையும் அழைத்துக் கொண்டு வருவோம்" என்றான்.

**இந்திரா பார்த்தசாரதி**
<parthasarathyindira@gmail.com>

# இளம் நாடக ஆசிரியர்களுக்கான அறிவுரை

நேர்காணல்: **டென்னஸ்ஸி வில்லியம்ஸ்**

கண்டவர்: **டாட்ஸன் ரேடர்**

தமிழில்: **ஸிந்துஜா**

ஓரினச் சேர்க்கை

என் படைப்பில் இது இடம்பெற வேண்டும் என்று நான் நினைத்ததில்லை. அதில் நான் அதிகம் அக்கறை கொண்டவனும் அல்ல; என்னுடைய அந்தரங்கமான தனிப்பட்ட வாழ்வில் தவிர. என் படைப்புகளில் பெண்களின் மன ஓட்டம் மிக முக்கியமான இடம் பெற்றிருக்கும். ஒருத்தியின் ஆளுமை, உணர்ச்சிகள், வேதனைகள், ஏக்கங்கள் ஆகியவற்றைப் பற்றி நான் அதிகம் யோசிப்பவன். 'நான் திருநங்கைகளை உருவாக்குகிறேன்' என்று மலத்தில் புரளுபவர்கள் பேசுகிறார்கள். நாற்றம் பிடித்தவர்கள். ஆண்களை விடப் பெண்களை நான் மிகவும் நேசிப்பவன். ஆண்களை விட எனக்குப் பெண்களிடத்தில் அதிக வரவேற்பு இருக்கிறது. என்னை விரும்பும் பெண்கள் ஆண்கள் விகிதம் 5 : 1 என்று இருக்கும்.

வலதுசாரிச் சிந்தனையாளர்கள் ஓரினச் சேர்க்கைக்கு வன்மையான எதிர்ப்பைத் தெரிவிப்பவர்கள். எனக்கு இப்போது எழுபது வயதாகும் போது இது ஒரு முக்கியமான பிரச்சினையாகத் தோன்றவில்லை. நாம் வேறு பிரச்சினைகளை எதிர்கொள்ள வேண்டியிருக்கிற கட்டாயத்தில் இருக்கிறோம். அமெரிக்காவில் எவ்வளவு ஓரினச் சேர்க்கையாளர்கள் என்று இதுவரை யாரும் சென்சஸ் எடுக்கவில்லை. அது முடியாத காரியமும் கூட!

கடற்பயணம்

எனக்குக் கடற்பயணங்கள் அசாத்திய மகிழ்ச்சியைத் தருபவை. அதிலும் என் உயிர் நண்பன் டொனால்ட் வின்ஹாமுடன் பயணிப்பது மற்றவர்களுடன் பயணிப்பதை விட முக்கியமானது. டொனால்டின் குறும்புத்தனம் எனக்கு மிகவும் பிடிக்கும். அதனாலேயே நான் அவனுக்கு எழுதிய கடிதங்களில் அவனைச் சீண்டிவிட்டுக்கொண்டிருப்பேன். அவனும் அவற்றை ரசித்துப் பதில் எழுதுவான்.

திடீரென்று ஒருநாள் என் கடிதங்களைப் புத்தகமாக வெளியிட்டுவிட்டான். பதிப்புக்குரிமைக்கான ஒப்புதலை அவனுக்கு எப்போது அளித்தேன் என்று எனக்கு நினைவில்லை. ஆனால், அப்புத்தகம் - என் கடிதங்கள் நிரம்பியது - என்னைக் கவர்ந்த ஒன்று.

டைம்ஸ் ஸ்கொயரில் இருந்த கிராஸ்ரோட்ஸ் டாவர்ன் ஓட்டலுக்குச் சென்ற போது நாங்கள் நன்றாகக் குடிந்திருந்த சமயத்தில் ஆஜானுபாகுவான இரண்டு மாலுமிகள் வந்தனர். டொனால்ட் என்னையும் அவர்களையும் தான் தங்கியிருந்த கிளாரிட்ஜ் ஓட்டலுக்கு அழைத்துச் சென்றான். எனக்கென்னவோ ஆரம்பத்திலிருந்தே அவர்கள் நடவடிக்கைகள் சரியாகப் படவில்லை. லாபியை அடைந்ததும் அவர்கள் எங்களிடம், "லிப்டில் ஏறி அறைக்குச் செல்லுங்கள், நாங்கள் பத்து நிமிடத்தில் அங்கே வருகிறோம்" என்றார்கள். ஆனால், நானும் டொனால்ட்டும் நன்றாகக் குடித்து மயங்கிக் கிடந்த சமயம் அது.



எங்கள் அறைக்குச் சென்ற பின் நடந்தது ஒரு மிருகத்தனமான தாக்குதல். அறை டெலிபோனின் வயர்களை அறுத்தெறிந்துவிட்டுக் கத்திமுனையில் என்னை ஓர் ஓரம் நிறுத்தி டொனால்டைத் தாக்க ஆரம்பித்தார்கள். டொனால்டின் பல் சிதறிக் கீழே விழுந்தது. அவர்கள் அடித்த அடியில் அவனுக்குக் கண்ணில் கருரத்தம் கட்டிக்கொண்டது. அவன் இறந்து போகும்படி அடித்தார்கள். அவன் ஒரு காச நோயாளி என்று நான் எவ்வளவு

கதறினாலும் அவர்கள் அடிப்பதை நிறுத்தவில்லை. அவன் மயங்கிச் சாய்ந்த பின் என்னைத் தாக்க ஆரம்பித்தார்கள். நான் அதிர்ச்சியினால் அதீத வலியினால் மயங்கிக் கீழே விழுந்துவிட்டேன். நான் கண் விழித்த போது மருத்துவமனையில் எமர்ஜன்சி வார்டில் இருந்தேன். கடைசி வரை நாங்கள் அவ்வாறு தாக்கப்பட்டதற்கான காரணம் தெரியவேயில்லை.

### கிப்

கிப் ஒரு நேர்மையான இளைஞன். அவனை நான் நேசித்தது போல அவனும் என்னை நேசித்தான் என்று நான் நினைக்கிறேன். கனடாவில் அவன் கட்டாய ராணுவ சேவை புரிய விரும்பாது ஒளிந்தவர்களில் ஒருவன். அவனுக்கு நாட்டியம் மீது மிகுந்த ஈடுபாடு இருந்தது. போர் தொடங்கிய போது அவனுக்கு இருபத்தி ஒன்று அல்லது இருபத்திரண்டு வயது இருக்கலாம். அந்த வயதில் ராணுவத்துக்குப் போனால் அவனது ஆசை நிறைவேற சாத்தியமே இருக்காது என்று அவனுக்குத் தெரிந்திருந்தது.

கிப்பை வைத்து நான், 'தெளிவற்றதும் தெளிவானதும்' என்னும் நாடகத்தை எழுதினேன். இந்த நாடகத்தில் காட்சியமைப்பு மிக முக்கியமான இடத்தைப் பெற்றிருந்தது. கடற்கரை அருகே உள்ளே ஒரு குடிலில் வசிக்கும் ஆகஸ்ட் என்னும் எழுத்தாளன் (அது நான்தான்) வசதிகள் எதுவுமற்ற சூழலில் தனது டைப்ரைட்டரை வைத்து எழுதுகிறான். தரையில் சாக்குத் துணியை விரித்து உறங்குகிறான். அக்குடிலை ஒட்டி அதே மாதிரி வசதிகள் எதுவுமற்ற மற்றொரு குடில், சமீபத்தில் ஏற்பட்ட புயலால் மிக மோசமான நிலையில் நிற்கிறது. அக்குடிலின் தரையைத் தனது நாட்டிய மேடையாக நினைத்து கிப் நாட்டியம் ஆடுகிறான். என் வசமிருந்த இசைக்கருவி எழுப்பிய ஓசைக்கு இணைந்து அவன் நடனமாடுகிறான்.

என் நாடகத்தின் தலைப்பு அப்போது என் கண் இருந்த நிலையைக் குறிப்பதாக இருந்தது. இடது கண் காடராக்ட்டால் பாதிக்கப்பட்டு மூட்டம் கொண்டிருந்தது. ஆனால், வலது கண் தெளிவான பார்வையைக் கொண்டிருந்து, என் இயல்பின் இரு பக்கங்களைத் தெரிவிப்பது போலிருந்தது. ஓரினச் சேர்க்கை உறவின் மீதான ஈடுபாடு, மிருதுவான நேசத்தை எதிரொலிக்கும் காதலுடன் கூடிய உறவு. . .

இவ்விதத்தில் நாடகத்தின் தலைப்பு மிகவும் பொருத்தமானதுதான்!

இந்த நாடகம் முன்னொரு நாள் சரித்திரத்தைத் தாங்கியிருப்பது போல அமைந்தது தற்செயலல்ல. கிப்பும் அவனது தோழியும் நடிக்கும் நாடகத்தில் இருவரும் நாட்டியக்காரர்கள். இந்த நாடகத்தை ஆகஸ்ட் என்னும் எழுத்தாளர் 1940இல் எழுதும் போதே நாற்பது வருஷம் - 1979இல் - கழித்து அவர்கள் இருவரும் இறந்துவிடுவார்கள் என்றும் தான் மட்டும் பிழைத்து உயிர் வாழ்வதாகவும் நாடகத்தின் மேடையில் சொல்லுவதைக் கேட்டு கிப்பும் அவனது தோழியும் ஆச்சரியமடைவார்கள். அது உண்மையில் நடந்தது. இந்த நாடகம் பாடல்களால் நிரம்பியது. நான் எழுதிய ஒரே இசை நாடகம் இதுதான்.

அவனுக்கு இருபத்தியோரு வயது ஆகும் போது கிப் இறந்துவிட்டான். அப்போது நான் எம்.ஜி.எம் நிறுவனத்துடன் சண்டை போட்டுக்கொண்டு வெளியேறிய சமயம். ஒரு நாள் எனக்கு வந்த போனில், "கிப் வாழ இன்னும் பத்து தினங்கள்தாம் உள்ளன" என்று ஒரு பெண் குரல் அலறியது. அதற்கு ஒரு வருஷம் முன்பு மூளையில் கான்சர் என்று அவனுக்கு அறுவை சிகிச்சை நடந்திருந்தது. டைம்ஸ் ஸ்கொயர் அருகே இருந்த பாலிகிளினிக் மருத்துவமனையில் கிடந்தான். உயிராய் மதிக்கும் நண்பன் சாவை நெருங்கிக் கொண்டிருப்பதைக் காண நமக்கு நெஞ்சு வெடித்துவிடும் போலிருக்கிறது.

நான் அங்கிருந்த போது ஒரு நர்ஸ் அவனுக்கு ஒரு ஸ்பூனில் ஜூஸ் தந்து கொண்டிருந்தாள். அவன் வழக்கத்தை விட அழகாய் இருந்தது போல எனக்குத் தோன்றியது. அவனுடைய செக்கோஸ்லேவியாக் கண்களைப் போல அவன் நினைவும் தெளிவாய் இருந்தது. நாங்கள் சற்று நேரம் பேசினோம். பிறகு நான் எழுந்து அவன் கையைக் குலுக்க என் கையை நீட்டினேன். அவனால் என் கையைப் பற்ற முடியவில்லை. நான் அவனது கையை எடுத்து என் கையுடன் இணைத்துக் கொண்டேன்.

கிப் இறந்த பிறகு அவனது சகோதரன் எனக்குச் சில புகைப்படங்களை அனுப்பியிருந்தான். ஒரு சிற்பிக்கு முன்பு நின்றுகொண்டு அவன் கொடுத்த நாட்டிய போஸ்கள் நிரம்பிய போட்டோக்கள். சுமார் இருபது ஆண்டுக் காலம் அவை என்னுடன் இருந்தன. பிறகு அவை எப்படியோ மறைந்துவிட்டன. ஆனால், கிப் இன்றும் என் மனதில் வாழ்கிறான்.

### ஹெமிங்வேயும் ஃபிட்ஸ்ஜெரால்டும்

ஓரினச் சேர்க்கையாளராக இல்லாவிட்டாலும் ஹெமிங்வேக்கு அதைப் பற்றி அறிய மிகுந்த நாட்டம் இருந்தது. ஆனால், எனக்கென்னவோ ஹெமிங்வேயும் ஃபிட்ஸ்ஜெரால்டும் அதில் 'கடுகளவு' விருப்பம் கொண்டிருந்தார்கள் என்று தோன்றியதுண்டு. என்னுடைய 'ஓர் கோடைக்கால ஒய்வு விடுதி உடைகள்' நாடகத்தை மறுபடியும் எழுதிய போது இதைப் பற்றிச் சற்று விரிவாகவே எழுதியிருக்கிறேன்.

ஹெமிங்வேயின் 'விசாரணை' படித்திருக்கிறீர்களா? முதலாம் உலகப் போரின் போது ஆல்ப்ஸ் மலையில் தங்கியிருக்கும் ஓர் இத்தாலிய அதிகாரியைப் பற்றியது. தனிமை அவனை வாட்டி எடுக்கிறது. பெண் துணை இல்லாமல். அவனிடம் பணியாளாக இருக்கும் இளைஞன் மிக அழகானவன்.



அதிகாரிக்கு அவன் மேல் ஆசை ஏற்படுகிறது. அதனால் அவன் பணியாளிடம் வெளிப்படையாகக் கேட்கிறான்: "உனக்குப் பெண்கள் மீது நாட்டம் உண்டா?" அந்தப் பையன் முதலில் பயந்துவிடுகிறான். பிறகு சமாளித்துக்கொண்டு, "நிச்சயமாக. எனக்கு விரைவில் திருமணம் நடக்கப் போகிறது" என்கிறான். அவன் சென்ற பின் அதிகாரி, "அயோக்கியப் பயல்! பொய் சொல்லிவிட்டுப் போகிறான் பார்!" என்கிறான்.

'ஓடைத் தீவுகள்' என்னும் நாவலின் கடைசி வரியில் ஒருவன் சொல்வான்: "அந்த மற்றொருவனை விட எனக்கு உன்னைப் பிடிக்கிறது." இதனால் அவர்கள் ஓரினச் சேர்க்கையில் ஈடுபடுபவர்கள் என்று அர்த்தமில்லை. ஆனால், கெர்ட்யூட்ஸ்டெய்ன், ஹெமிங்வே அர்த்தப்படுத்துவது அதுதான் என்கிறாள். சிலசமயம் எனக்கு இதெல்லாம் அவ்வளவு முக்கியமான விஷயங்களா என்று தோன்றிவிடுகிறது.

ஆனால், ஃபிட்ஸ்ஜெரால்ட் பற்றி ஹெமிங்வே சொன்னது உங்களுக்குத் தெரியுமா?

"ஸ்காட் ரொம்ப அழகு. அவரை முதலில் சந்திக்கும் போது அவர் வாய் உங்களை மிகவும் சங்கடப்படுத்தும் ஏன் அதற்கடுத்து வரும் சந்தர்ப்பங்களிலும் கூட!"

பிரின்ஸ்டன் ட்ரையாங்கிள் கிளப்பில் நடந்த நாடகம் ஒன்றில் ஃபிட்ஸ்ஜெரால்ட் பெண்ணாக நடித்தார். எந்த ஒரு பெண்ணைக் காட்டிலும் அழகாக நிஜமான மங்கையாகத் தோற்றமளித்தார். ஃபிட்ஸ்ஜெரால்ட் அவர் மனைவியைத் தவிர வேறு யாருடனும் உறவு வைத்துக்கொள்ளவில்லை. அவருடைய இறுதி நாள்களில் ஷீலா கிரகாமுடன் என்று சிலர் சொல்வார்கள். ஆனால், அவளுடன் அவர் படுக்கையறைக்குச் சென்றாரா? இல்லையெனில் இவை எதுவும் இறுதி விளைவை ஏற்படுத்துவதில்லை. அபூர்வமாகச் சில எழுத்துக்களில் செக்ஸ் வர்ணனையை ஓர் எழுத்தாளர் கொண்டு வரக்கூடும். நான் ஆண் - பெண் இருவரையும் வைத்து எழுதுகிறேன். ஆனால், பாலுறவைப் பற்றி எழுதுகையில் நான் என்னை முன்வைத்துதான் எழுதுகிறேன்.

ஃபிடல் காஸ்ட்ரோ

ஹெமிங்வே மூலம் ஃபிடல் காஸ்ட்ரோவைச் சந்திக்கும் வாய்ப்பு எனக்கு கிடைத்தது. அச்சமயம் காஸ்ட்ரோவின் அரசு ஆள வந்து ஒரு வருடம் நிறைந்திருந்தது. நான் ஹவானாவில் இருந்தேன். அப்போதைய அமெரிக்க உள்துறை அமைச்சராக இருந்த ஜான் பாஸ்டர் டல்லஸ் என்னும் வேசிமகன் குறுக்கிடாமல் இருந்திருந்தால், காஸ்ட்ரோ அமெரிக்காவின் நண்பராக இருந்திருப்பார். இந்த டல்லஸ்சுக்குப் புரட்சி என்றாலே வயிற்றைக் கலக்கும். இந்த ஆளுக்குக் குழந்தைகளைக் கொடுமைப்படுத்திக் கொன்றவனான பாடிஸ்ட்டா என்கிற அயோக்கியனை மிகவும் பிடிக்கும் என்பதிலிருந்தே எத்தகைய மோசமான கம்பனியைக் கூட்டு வைத்திருந்த ஆள்

இந்த டல்லஸ் என்று உங்களுக்குத் தெரிந்துவிடும். .

காஸ்ட்ரோ ஒரு கனவான். படித்தவர். அவரை ஹெமிங்வேயோடு சந்திக்கச் சென்ற சமயம் அவர் மந்திரிசபைக் கூட்டத்தில் இருந்ததால் நாங்கள் மூன்று மணி நேரம் காத்திருந்தோம். ஹெமிங்வே என்னை அவரிடம் அறிமுகப்படுத்திய போது, "ஓ! அந்தப் பூனை!" என்று சொல்லி என்னைப் பார்த்துக் கண்ணடித்தார். 'கேட் ஆன் எ ஹாட் டின் ரூஃப்' என்னும் என்னுடைய நாடகத்தை அவர் நினைவு வைத்துச் சுட்டிக் காட்டியது எனக்குப் பெருமிதத்தை அளித்தது. என்னை அவருடைய மந்திரி சபைக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

## ஜான் எஃப் கென்னடி

கோர் விடால் மூலம் கென்னடியை நான் சந்தித்தேன். அப்போது அவர் குடியரசுத் தலைவராக ஆகியிருக்கவில்லை. பின்னர் ஒரு தடவை வெள்ளை மாளிகையில் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது. ஆந்த்ரே மால்ராக்ஸுக்கு அளித்த விருந்துக்குக் கென்னடி புகழ்பெற்ற எழுத்தாளர்களை - நாடக ஆசிரியர்களை - அழைத்திருந்தார்.

கென்னடி ஒரு மிகச் சிறந்த கனவான். உண்மையிலேயே சிறந்த மனிதன். நாங்கள் வெள்ளை மாளிகைக்குச் சென்ற தினம் சாலையில் மிகுந்த வாகன நடமாட்டம். கோர் விடால் அப்படியொன்றும் சிறந்த காரோட்டி அல்ல. சில சமயங்களில் நல்ல எழுத்தாளராயிருந்தாலும்! ஆகவே, நாங்கள் ஒரு மணி நேரம் தாமதமாக வெள்ளை மாளிகையை அடைந்தோம். நாங்கள் சரியான நேரத்துக்கு வந்துவிட்டது போலக் கென்னடி எங்களை வரவேற்றார். அவருடைய நடமாட்டம் அப்பழுக்கற்ற போக்கினை உடையதாக இருந்தது. ஜாக்கி கென்னடியும் மிகக் கவர்ச்சிகரமான பெண்மணி. இன்றும் கூட! நான் இப்போது அவரைப் பார்த்து வெகு நாள்களாகியும் கூட!

## கார்ட்டரின் வெள்ளை மாளிகை

திரைப்படத் தொழிலில் ஈடுபட்டவர்களைக் கவுரவிக்கும் ஏதோ ஒரு விழாவுக்கு நான் சென்றிருந்தேன். அச்சமயம் கார்ட்டரும் அவர் மனைவியும் விருந்தாளிகளை மகிழ்விக்கும் பணியில் அவ்வளவாகத் தேர்ச்சி பெற்றவர்கள் போலக் காணப்படவில்லை. அவர் மிதமான குடிகாரர் போல் தோன்றினார். இது அவருடைய தவறான வழிமுறை என்று நான் நினைத்தேன். ஒவ்வொருவருக்கும் ஒரு கிளாஸ் இனிப்புச் சுவையற்ற கலிபோர்னியா ஒயின் வழங்கப்பட்டது. நான் அதை ஒரே மடக்கில் குடித்துவிட்டு இன்னும் கிடைக்குமா என்று பார்த்தேன். அங்கு இருந்தது ஒயின் மட்டும்தான். விஸ்கி போன்ற விறுவிறுப்பை ஏற்படுத்தும் மது எதுவும் காணப்படவில்லை. ஆனால், ஒரு ஆளுக்கு ஒரு கிளாஸ் ஒயின்தான்! நான் அங்கிருந்த சாம் ஸ்பைகலிடம் எனக்கு இன்னும் வேண்டும் என்றேன். அவன் மேஜைக்கு முன் நிற்க அவன் பின்னல் நின்று நான் அவன் தந்த ஏழெட்டு கிளாஸ்களை எடுத்துக்கொண்டு நகர்ந்தேன்.

பின்னர் வெள்ளை மாளிகைக்கு நான் சென்ற போது கார்ட்டர் ஷாம்பெயின் தந்து கொண்டிருந்தார். விறுவிறுப்பான மது? ம்ஹூம், ஒன்று கூட இல்லை. கார்ட்டர் மனிதாபிமானம் நிரம்பிய பெரிய மனிதர். அவருடைய இரண்டாம் பதவிக் காலத்தில் மிகச் சிறப்பாகப் பணியாற்றி இருந்திருக்கலாம். பணமுதலைகளுக்குக் கார்ட்டர் உதவி புரிபவராக இல்லை. அவர் அவ்வளவு தூரம் அவர்களிடம் அனுசரித்துப் போகும் நபராக இருக்கவில்லை. அவரது முயற்சிகளை அரசாங்கம் ஒதுக்கித் தள்ளிவிட்டது.

## ஜேன் வைமன்

ஜேன் வைமன் எனது 'கண்ணாடிச் சிறைக்கூண்டு' நாடகத்தில் கதாநாயகியாக நடித்தவள். அவள் ரொனால்டு ரீகனை மணந்தாள். அவளுக்கு அழகான நாசி கிடையாது. அதே போல அவளை மணந்தவருக்கு மூளை கிடையாது.

## ஹாலிவுட்

என்னுடைய பெரும்பாலான படங்கள் சென்சாரின் அளவற்ற அதிகாரத்துக்குப் பலியானவை. இதனால்தான் 'ஸ்ட்ரீட் கார்' மறுபடியும் எடுக்கப்பட்ட போது அதை சிட்னி லூமே இயக்க வேண்டும் என்று விரும்பினேன். அச்சமயம் எலியா காசன் படங்களை இயக்குவதை நிறுத்திவிட்டார். நான் படத்தில் ஸ்டான்லியாக நடிக்கப் பொருத்தமான நடிக்கரைத் தேடிக்கொண்டிருந்த போது சில்வஸ்டர் ஸ்டாலோன் பெயர் வந்தது. ஸ்டான்லி பாத்திரத்துக்கும் ப்ளான்ச் பாத்திரத்துக்கும் சரியான நடிகர், நடிகை கிடைக்கும் வரை படம் எடுப்பதில் நான் ஆர்வம் காட்டாதிருந்தேன்.

1940களில் ஹாலிவுட்டில் என் வாழ்க்கை பொற்காலமாக இருந்தது. நான் வேலை பார்த்த இடத்தில் ஏற்பட்ட தகராறு காரணமாக நான் பார்த்த வேலையை என்னிடமிருந்து எடுத்துக் கொண்டுவிட்டார்கள். அதற்காக எனக்கு வாரம் இருநூற்றைம்பது டாலர் கொடுக்கப்பட்டது. இது நடந்தது 1943இல். இன்று அதன் மதிப்பு ஆயிடம் டாலர். அவர்கள் எனக்கு வேறு வேலை தருகிறார்களோ இல்லையோ, எனக்கு இந்த ஊதியம் தொடர்ந்து தரப்பட வேண்டும் என்று ஒப்பந்தம் இருந்தது!

'திருமணம் ஓர் தனிப்பட்ட நிகழ்வு' என்னும் படத்திற்கு முதலில் என்னை லாரா டர்னருடன் இணைத்தார்கள். என் வசனங்கள் அவர்களைப் பெரிதும் ஈர்த்ததால் என்னை வேலைக்கு

எடுத்துக்கொண்டார்கள். அவர்கள் விதித்த ஒரு நியதி: லாராவுக்குப் பல அசைகளில் (Syllables) உள்ள வார்த்தைகளைத் தர வேண்டும். நான் அவர்களிடம் சில வார்த்தைகளில் ஒன்றுக்கும் மேற்பட்ட அசை வரும் என்றேன். அப்போது தயாரிப்பாளரான பான்ட்ரோ பெர்மன் - லாரா அவனது கேர்ள் பிரென்ட் - என்னிடம், "டென்னஸி, லாரா இரண்டு அசைகளைச் சமாளிப்பாள். அதற்கு மேல் மூன்றாவது என்றால் கூட, நீ அவளுடைய அகராதியை ஆட்டங்காண வைப்பவனாக ஆகிவிடுவாய்" என்று சிரித்தான்.

கையிலிருந்த எல்லாப் பணமும் தீர்ந்து போகும் வரை நான் சாண்டாமோனிகாவில் ஆட்டம் போட்டேன்.

## எலிசபெத் டெய்லர்

மான்டி கிளிஃப்ட் மிகப் பெரும் சோக நடிகன். மர்லின் மன்றோவை விட. எலிசபெத் டெய்லர் அவனிடம் அளவு கடந்த அன்பு கொண்டிருந்தாள். வேறு பல பெண்களும் கூட. உதாரணமாக காதரீன் ஹெப்பர்ன். ஆனால், குறிப்பாக எலிசபெத். எலிசபெத் ஓர் அருமையான பெண். அவளுடைய பொதுவெளிப் பிம்பத்துக்கு நேர்மாறானவள். அவள் வாழ்க்கை நரகமாக்கி விட்டாலும் அவள் மட்டமாக ஒருபோதும் நடந்து கொண்டதேயில்லை. முப்பத்தியோரு அறுவை சிகிச்சை மேற்கொண்டவள். வலி. எப்போதும் வலியின் மூர்க்கப் பிடியில் இருந்தவள். மிக மென்மையான பெண்.

நான் எலிசபெத்தை லிலியன் ஹெல்மனின் 'தி லிட்டில் ஃபாக்ஸஸ்' நாடக அரங்கேற்றத்தன்று பார்த்தேன். ஏதோ பிறந்ததிலிருந்து நாடக நடிகையாக இருப்பவள் போல் அன்று அவள் பார்வையாளர்களைக் கவர்ந்திருந்தாள். அவளிடம் நகைச்சுவை உணர்வு கொஞ்சம் கம்மி. அதை அவள் புறந்தள்ளி முன் வருவாள் என்று நான் நம்பினேன். வாஷிங்டனில் நடந்த நாடகத்தில் அவள் என் நம்பிக்கையை உறுதி செய்தாள்

லிலியன் ஹெல்மனை ஏதோ ஒரு சாதாரண நாடக ஆசிரியர் என்று ஒருவர் நினைக்கலாம். ஆனால், லிலியன் தன்னைப் பற்றி அப்படி நினைத்துக்கொண்டதில்லை. அரங்கேற்றத்தன்று எலிசபெத் டெய்லர் தன்னை வெளிப்படுத்திக்கொண்ட பின்னர் பெரிய பார்ட்டி ஒன்று நடந்தது. ஏகப்பட்ட மது! நாடக இயக்குனர் என் அருகில் அமர்ந்திருந்தார். அவர் எழுந்து திடீரென்று லிலியனைப் பார்க்க வேண்டும் என்று கிளம்பினார்.

நான் அவரிடம், "அவளுடைய ராயல்டியில் எனக்கும் சிறிது பங்கு உண்டு என்று தெரிவியுங்கள்" என்றேன்.

அவர், அவளிடம் நான் சொன்னதைக் கூறிவிட்டு அவளிடம் பேசிய பின் திரும்ப நான் இருந்த இடத்துக்கு வந்தார். "உங்களுடைய செக் தபாலில் இன்று சேர்த்தாயிற்று என்று லிலியன் உங்களிடம் தெரிவிக்கச் சொன்னாள்" என்றார்.

அவள் திறமையான நாடக ஆசிரியர். அவள் நாடகங்களில் அத் திறமையை ஒருவர் காணலாம். அவளுக்கு நுரையீரலில் வியாதி என்று பின்னாளில் யாரோ சொன்னார்கள். யார் தான் நோயில் விழாமல் தப்பிக்க முடிகிறது? நோயாளியாகிப் பின்னர் இறந்து...

## வில்லியம் இஞ்ச்

பில் இஞ்ச் துக்ககரமான மனிதன். விமர்சகர்கள் அவனைப் பந்தாடினார்கள். மிகவும் மிருகத்தனமான தாக்குதல்களை அவன் மீது நிகழ்த்தினார்கள். 'திரும்பி வா', 'சின்னஞ் சிறு ஷீபா' என்னும் இரு நாடகங்களும் அற்புதமானவை. மற்றொரு நாடகமான 'பாசத்'தில் வரும் சிறுவன் அவனது தாயைக் கொன்றுவிடுவான். மிகவும் கூர்மையாக எழுதப்பட்ட நாவல்.

நான் அவனை செயின்ட் லூயிசில் சந்தித்தேன். சிகாகோவில் 'கண்ணாடிச் சிறைச்சாலை' ஓட்டம் முடிந்த பின் வந்தேன். செயின்ட் லூயிஸ் ஸ்டார் டைம்ஸ் என்னும் பத்திரிகைக்காக என்னைப் பேட்டி கண்டான். அப்பத்திரிகையின் நாடகம் மற்றும் இசை விமரிசகனாக இருந்தான். சில நாள்களில் நாங்கள் இருவரும் நெருங்கிய நண்பர்களாகிவிட்டோம்.

அவனது இறுதிக் காலத்தில் பார்பரா பக்ஸ்லியுடன் வேற்றுப் பாலின (Heterosexual) உறவுகொள்ள முயன்றான். அவள், அவன் மீது மிகுந்த பிரியம் கொண்டிருந்தாள். ஒரு நாள் அவள் என்னைப் போனில் அழைத்து, "பில் கலிபோர்னியாவில் இருக்கிறான். அவன் படுக்கை முழுவதும் சக்தி வாய்ந்த தூக்க மாத்திரைகளை இறைத்து வைத்திருக்கிறான். எப்போதும் படுக்கையிலேயே இருக்கிறான்" என்றாள்.

"அவன் தற்கொலை செய்துகொள்ள முயற்சிக்கிறானா?" என்றேன் நான். "யார் அவனுடன் இருப்பது?"

"அவன் சகோதரி. நீ அவளைக் கூப்பிட்டு அவனைத் தூக்க மாத்திரையின் பிடியிலிருந்து விடுவிக்கச் சொல்லு" என்றாள்.

அவன் சகோதரியுடன் பேசிய போது அவள் செய்கிறேன் என்றாள். ஆனால், ஒரு மாதம் கழித்து நான் ரோமில் இருந்த போது பத்திரிகையில் அவனது சாவுச் செய்தியைப் படித்தேன். அவன் கார் ஷெட்டைப் பூட்டிவிட்டு உள்ளே காரை ஓட்டித் தன்னைத்தானே மாய்த்துக்கொண்ட விபரம் வெளியாகியிருந்தது.

ஃபிட்ஸ்ஜெரால்ட், ஹெமிங்வே, ஹார்ட் கிரேன், இஞ்ச்... ஓ, எவ்வளவு மரணங்கள். பெரும் சீரழிவு!

ஒரு அமெரிக்க எழுத்தாளனின் இறுதிக் காலம் பயங்கரமானதுதான். ஹெமிங்வேயின் இறுதிக் காலம் கொடூரமான பதற்றம் மூட்டும் கொடும் கனவு. விமானத்தின் புரொபெல்லரை நோக்கி நடந்த விதம்.

## கிறிஸ்தோபர் ஐஷர்வுட்

நான் அவரை நாற்பதுகளில் கலிபோர்னியாவில் சந்தித்தேன். அப்போது அவரை வேதாந்த விசாரம் கைப்பற்றியிருந்தது. அவர் ஒரு மடத்தில் தங்கி, தியானமும் மௌனமும் வாழ்க்கையின் இரு முக்கிய அம்சங்கள் என்று வாழ்ந்தார். லிங்கன் கிறிஸ்டெய்னின் கடிதத்துடன் அவரை ஒரு நாள் சந்திக்கச் சென்றேன். அப்போது மௌன விரத நாள்கள் கடைப்பிடிக்கப்பட்டு வந்தன. எனக்கு கதவைத் திறந்த துறவி என் கையில் ஒரு பென்சிலையும் தாளையும் கொடுத்து எதற்கு வந்திருக்கிறேன், யாரைப் பார்க்க என்ற விவரங்களை எழுதித் தரச் சொன்னார். நான் கிறிஸ்தோபர் ஐஷர்வுட் என்று எழுதித் தந்தேன். அங்கிருந்தவர்கள் அதற்குப் பின் என்னைச் சற்று சந்தேகத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு பெரிய அறையில் பலர் தாமரை வடிவில் உட்கார்ந்து தியான வடிவில் ஈடுபட்டிருந்தார்கள். கிறிஸ்தோபர் அங்கிருந்தார். முதலில் நான் மௌனமாக எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்தேன். திடீரென்று நான், “கிருஷ்ணா!” என்று உரக்கக் கத்தினேன். அது யாரென்று கூட எனக்கு அப்போது தெரியாது. நான் அந்த மௌனச் சூழலை உடைத்தெறிய விரும்பினேன். கிறிஸ்தோபர் எழுந்து ஒரு காகிதத்தில், ‘நாளை உன்னைக் கூப்பிடுகிறேன்’ என்று எழுதிக் கொடுத்துவிட்டு கதவு வரை வந்து வழியனுப்பினார்.

அவர் ஒரு மிகச் சிறந்த எழுத்தாளர். எதற்காக இம்மாதிரி மடத்தைத் தேடித் சென்றார் என்று எனக்கு விளங்கவில்லை. ஒரு வேளை அவர் தனது வாழ்வின் துக்ககரமான நாள்களை அப்போது எதிர்கொண்டு இருந்திருக்க வேண்டும். அல்லது அவரைவிட்டு விலகிச் சென்ற நண்பர்கள் காரணமாயிருக்கலாம்.

தனிமையில் வாடி அதனாலும் மடத்துக்குச் சென்றிருக்கலாம்.

## எவ்டு ஷெங்கோ

என்ன ஆயிற்று இவருக்கு? இன்னும் அவருக்கு சோவியத் மீது நம்பிக்கை இருக்கிறதா?

அவர் கடைசியாக அமெரிக்காவில் தங்கி யிருந்த போது ஒரு நாள் மதிய உணவுக்கு என்னை அழைத்தார். மிக மிக விலை உயர்ந்த ரோத்ஷீல்ட் மதுவைப் பாட்டில் பாட்டிலாக வாங்கினார். அன்று வந்த பில் மொத்தம் மூன்று பக்கங்களை அடங்கி யிருந்தது. நான் அயர்ந்துவிட்டேன். “நீங்கள் ஒரு கேபிடலிஸ்ட் பிக்“ என்றேன் அவரிடம்.

அவருடன் ஒரு மொழிபெயர்ப்பாளனை அழைத்து வந்திருந்தார். அவன் ஒரு மொழிபெயர்ப்பும் செய்யவில்லை. எவ்டுஷெங்கோவே மிக அழகான ஆங்கிலத்தில் பேசினார். புரிந்துகொண்டார். அந்த மொழிபெயர்ப்பாளன் நன்றாகக் குடித்து நன்றாகச் சாப்பிட்டதைத் தவிர வேறு ஒன்றும் செய்யவில்லை! பலர் எவ்டுஷெங்கோவைப் பற்றிப் பலவாறு பேசி யிருக்கிறார்கள். அவற்றை எவ்வளவு தூரம் நம்ப முடியும் என்று தெரியவில்லை. ஆனால், அவரது நடத்தை பார்ப்போரைக் கவரவல்லதாய் இருந்தது. உங்களால் அதை ரசிக்க முடிந்தால்!

## ட்ருமென் கெபோடி

*1948*இல் நான் ட்ருமெனைச் சந்தித்தேன் என்று நினைக்கிறேன். ‘மற்ற குரல்கள், மற்ற அறைகள்’ நாடகத்தை அவன் எழுதிய சமயம் அது. நகைச்சுவை நிரம்பிய, சற்றுக் கலவரமூட்டும் எழுத்தாளன். புத்திசாலி என்று ஆரம்பத்தில் நினைத்தேன். ஆனால், ஒரு தடவை என் நண்பன் ஃபிராங்க் பற்றி மோசமாகப் பேசிய போது எனக்குக் கோபம் வந்துவிட்டது. அப்போது நாங்கள் அவனுடன் நேப்பிளுக்குச் சென்று கொண்டிருந்தோம். இந்தத் தகராறினால் நான் மேலும் பிரயாணம் செய்ய மறுத்தேன்.

இது நடந்தபின் கூட நான் ட்ருமெனை வெறுக்கவில்லை. ஆனால், அவனது மோசமான வார்த்தைகளை நான் எப்போதும் விரும்பவில்லை. அவன் தன் சிறு வயதில் மோசமான வசவுகளால் காயம் பட்டிருக்கக் கூடும். தான் பிறந்தது நியூ ஆர்லியன்ஸில் என்று அவன் ஒரு பேட்டியில் கூறினாலும் உண்மையில் அவன் பிறந்து வளர்ந்தது அலபாமாவில் என்று அவன் கூட வளர்ந்த ஊர்க்காரர்கள் சொன்னார்கள்.

ட்ருமென் ஏன் இப்படி இருக்க வேண்டும்? தன்னைச் சுற்றி ஒரு மாயத் திரை இருக்க வேண்டும் என்னும் அவனது விருப்பம்தான் காரணம். அதனால் மற்றவர்கள் குழம்புவது அவனுக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தந்தது. கதை விடுகிறான் என்று சொல்வதற்குப் பதிலாக அவன் ஒரு கற்பனாவாதி என்று கௌரவமாகச் சிலர் சித்தரிக்கிறார்கள். நான் அவனை நேசிக்கிறேன். அவனைப் பொய்யெனென்று கூற என் மனது இடம் கொடுக்கவில்லை. தவிர அதுதானே அவனது தொழில்!

## என்னுடைய வினோதமான சாகசம்

நான் மியாமியில் தனியாக இருந்தேன். ஃபிராங்க் என்னைக் காண வருவதாக இருந்தான். அவன் வந்ததும் நாங்கள் கே வெஸ்ட்டுக்குப் போவதாக இருந்தோம்.

அந்த இரவில் நான் நடந்து சென்ற சாலையில் ஒரு பார்க் இருந்தது. அங்கு ஒருவன் தனியாக நின்றிருந்தான். அவனைப் பார்க்க எனக்குப்



பாவமாக இருந்தது. அவனைப் பார்த்தால் தோழமைக்குரியவனைப் போலத் தோன்றியதால் அவனிடம் பேச்சுக் கொடுத்தேன். "நான் என் அறைக்குச் செல்ல வேண்டும்; உன்னால் வர முடியுமா?" என்று கேட்டேன். அவன் சரியென்றான். நாங்கள் நடந்து சென்ற போது தெருவிளக்கிலிருந்து வீசிய வெளிச்சத்தில் அவன் கந்தலான உடைகள் அணிந்திருந்ததைக் கவனித்தேன். அவனை இந்தக் கோலத்தில் ஹோட்டல் லாபியில் விட மாட்டார்கள் என்பதால் ஓட்டலில் இருந்த நீச்சல் குளத்தின் பக்கம் சென்று உட்கார்ந்து பேசலாம் என்றேன்.

அவன் சரியென்றதும் நாங்கள் அந்த இடத்தை அடைந்தோம். அவன் திடீரென்று என் மீது பாய்ந்து எனது பணப்பையைப் பிடித்து இழுத்தான். அதில் ஏழு டாலர்கள்தாம் இருந்தது. ஏமாற்றமடைந்த அவன் என் கையில் கட்டியிருந்த வாட்சைக் கழற்ற முயன்றான். முடியவில்லை. நான் அணிந்திருந்த மூன்று வைரக் கற்கள் பதித்திருந்த மோதிரத்தைப் பிய்த்தெடுக்க முயன்று அதிலும் தோற்றான். நான் அவனிடம், "இந்த மோதிரம் கழற்ற முடியாதபடி இறுக்கமாக இருக்கிறது. என் அறையில் டாலர்கள் உள்ளன. நீ இங்கேயே இரு. நான் போய் பணம் எடுத்து வருகிறேன்" என்றேன். இதற்குள் அவன் ஒரு கிறுக்கன் என்று எனக்கு நன்றாகத் தெரிந்துவிட்டது.

அறைக்குச் சென்ற நான் கதவைப் பூட்டிவிட்டுப் படுக்கையில் சாய்ந்தேன். இரவில் அரைமணிக்கொரு தடவை அவன் போன் செய்துகொண்டே இருந்தான். பாவம் என்று என்னால் பரிதாபப்படாமல் இருக்க முடியவில்லை.

### நகைச்சுவை

வயதாக ஆக எனக்கு நகைச்சுவை என்றால் இப்போது மிகவும் பிடிக்கிறது. குறிப்பாக சீரியஸான விஷயத்தையும் பகடி செய்து பேசுவது. இப்போது நான் எழுதி ரும் 'எவர்லாஸ்டிங் டிக்கட்' ஒரு கோதிக் காமெடி என்று சொல்லலாம். நாடக உலகைப் பற்றி, சமூகத்தைப் பற்றித் தீவிரமான விமர்சனங்களை முன் வைக்கும் நான் அவற்றைப் பகடியாக வெளிப்படுத்துகிறேன்.

### பணக்காரர்கள்

பணக்காரர்கள் மீது எனக்குக் கோபம் எதுவும் கிடையாது. என் அபிப்பிராயத்தில் அவர்கள் நடமாட்டம் கட்டுப்பாடுகளில் அடங்கிக் கிடக்கிறது. அவர்கள் ஓர் குறுகிய செயற்கை உலகில் வாழ்கிறார்கள். குளோரியா வான்டர்பில்ட்டின் மகிழ்ச்சியற்ற உலகம் அது. அல்லது ஆஸ்கர் டி லா ரென்டாவின் எல்லோரையும் அதிர்ச்சியூட்டும் உலகம். ஆஸ்கரின் பெயரை நீங்கள் என்னிடம் உச்சரித்தால் அடக்க முடியாத கோபத்தில் என் முகம் ரத்த சிவப்பாகி விடும். இவர்கள் மிகவும் சாதாரணர்கள். அவனும், ஏன் அவளும், எங்கிருந்து வந்தவர்கள், எப்படி வாழ்க்கையை ஆரம்பித்தார்கள் என்றெல்லாம் எனக்குத் தெரியும். ஏதோ மாபெரும்

கண்டுபிடிப்பாளர்களைப் போல அவர்கள் போடும் ஆட்டம்! அவர்கள் இந்த சமூகத்தின் மட்டமான குறியீடுகள். ஆழமற்ற, மேலோட்டமான புரிதல் கொண்டவர்கள். இன்றைய சமூகம் எதிர்பார்க்கும் ஆழமான சிந்தனையோட்டத்துடன் பரிச்சயம் இல்லாதவர்கள். அவர்களைக் கண்டு என்னால் திடுக்கிடாமல் இருக்க முடியவில்லை.

அறுபதுகள், உயிர்த்துடிப்பு மிகுந்திருந்த காலம். குடியுரிமை இயக்கம், ஏகாதிபத்தியத்துக்கு எதிரான போராட்டம் ஆகியவை நிகழ்ந்த காலம். நான் கோர் விடாலிடம், "அறுபதுகளை நான் உறங்கிக் கழித்தேன்" என்று கூறிய போது எனக்கே அது ஒரு மட்டமான ஜோக் என்று தோன்றியது. என் மயக்கமாகக் கூட இருக்கலாம். இன்று யோசித்துப் பார்க்கும் போது இளம் சிறார்கள் அன்று தங்கள் பெற்றோர்களின் எண்ணங்களிலிருந்து, அவர்கள் வாழ்க்கையை நடத்திய விதத்திலிருந்தும் வேறுபட்டு நிற்க அச்சமுற்றவர்களாய் இருந்தார்கள் என்று தோன்றுகிறது. நான் - நான் - நான் தலைமுறை! அவ்வளவு சுயநலம்! தம்மைச் சுற்றியிருக்கும் உலகில் என்ன நடக்கிறது என்னும் பிரக்ஞை சிறிதுமில்லாது இளைஞர்கள் நடமாடிய காலம். எல்சால்வடோரில் என்ன நடக்கிறது என்றறிய நாட்டமில்லாதிருந்த நாள்கள். ராணுவ ராட்சசர்களுக்கு அரசே ஆதரவு தந்து படைகளைக் கிராமங்களுக்கு அனுப்பி ஒன்றுமறியாத விவசாயிகளைக் கொலை செய்த பாதகம் நிறைந்த நாள்கள்! அமெரிக்க இளைஞர்களுக்கு இதை பற்றிய கவலை எதுவும் இல்லை. கௌதமாலாவில் ஒரே நாளில் நானூறு பேர் கொலை செய்யப்பட்டனர். ஆனால், யாரும் மூச்சு விடவில்லை. அருகிருந்த ஹோண்டுராஸ் நாட்டின் அன்றையத் தலைமுறை அதைப் பற்றிக் கவலை கொள்ளவில்லை. ஏன்? சிலி நாட்டின் ஜனாதிபதி ஆலன் டே எப்படிச் சுடப்பட்டு இறந்தார் என்று நமக்கெல்லாம் தெரியும். ஏன் என்றும், எதற்காக என்றும் கூட. லத்தீன் அமெரிக்கா முழுவதும் வாடிக் கிடந்த போது நான் - நான் - நான் தலைமுறை வாய் பொத்திக் கிடந்தது.

அறுபதுகளின் உயிர்த்துடிப்பு மறக்க இயலாதது. அங்கிருந்துதான் நாம் ஒரு வாழத்தக்க சமூகமாக உருவாகத் தொடங்கினோம். ஆனால், நிக்சன் பதவிக்கு வந்தது, எல்லாவற்றையும் அழித்துவிடும் ஏகபோக முதலாளித்துவ ஆட்சிக்குள் நாட்டைத் தள்ளிவிட்டது.

## சொற்பொழிவுகள்

நான் சொற்பொழிவுகள் நிகழ்த்துவதில்லை. சிலர் அப்படியே வற்புறுத்தினாலும், எழுதி வைத்துக்கொண்டு படிப்பேன். ஒரு முறை டென்னஸி பல்கலைக் கழகத்தில் சொற்பொழிவாற்றச் சொன்னார்கள். நான் வீட்டிலிருந்து போகும் போது பேச்சுக்கென தயார் செய்து வைத்திருந்த தாள்களை எடுத்துச் செல்ல மறந்துவிட்டேன். அதனால் நான் கையில் குறிப்புகள் எதுவும் இல்லாமல் உரையாற்றினேன். அம்மாதிரி நான் செய்திருக்கக் கூடாது என்று அங்குள்ள பேராசிரியர்களுக்கு என் மீது கடுங்கோபம். அவர்கள் மிகவும் பிற்போக்குவாதிகள்!

## நாகரிகத்தின் நிலைமை

தொலைக்காட்சி, இலக்கியத்தைப் பின்னுக்குத் தள்ளிவிட்டது, இல்லையா? எழுத்தாளர்களை உருவாக்கும், அவர்களை அரவணைக்கும் நாகரிகம் விலகிப் போய்விட்டது. ஆம். ஆனால், நான் சொல்வது தீவிரமான எழுத்தாளர்களைப் பற்றி. பிராட்வேயில் அவர்கள் வேண்டுவது கீழ்த்தரமான காமெடிகளை, இசை நாடகங்களை. தீவிரமாக எழுதப்பட்ட நாடகத்தை இன்று தயாரிப்பது அல்லது அது ஒரு வாரமாவது ஓடுவதோ நடக்க முடியாத செயலாகிவிட்டது. ஆல்பியின் 'லோலிட்டா'வை அவர்கள் தூக்கியெறிந்து விட்டார்கள். அவ்வளவு குரூரமான விமரிசனங்களை நான் படித்ததேயில்லை. ஆனால், ஆல்பி தழுவல்களைத் தொட்டிருக்கக் கூடாது. அவருடைய சொந்தப் படைப்புகளே மிகவும் வசீகரமானவை. இருந்தாலும் கூட ஒரு படைப்பை விமரிசிக்கையில் கலைப்பண்பு எதுவுமின்றிக் காட்டடியாகக், குரூரமான விமரிசனங்களை வைப்பதுசரியல்ல. விமரிசகர்கள், படைப்பாளிகளைக் கொல்வதில் குறியாயிருக்கிறார்கள். .

## வருத்தம்

நான் வருத்தம் கொள்ள வேண்டிய விஷயங்கள் பல உள்ளன. ஆனால், இப்போது அவற்றை நினைக்க வேண்டியதில்லை. மிகச் சில விஷயங்களைத்தான் ஒருவர் தன் வாழ்க்கையில் மாற்ற முயற்சிக்கலாம். தன் விருப்பதிக்கேற்ப செயல்படுவதில் கூட ஏராளமான கஷ்டங்கள் உள்ளன. நான் தனி மனிதனின் குற்ற உணர்வு பற்றி அக்கறை கொள்வதில்லை. மக்கள் தம் செயல்களுக்கு அவர்களே முழுப் பொறுப்பு ஏற்க வேண்டும் என்பதிலும் எனக்கு உடன்பாடு இல்லை. நாம் சூழலின் கைதிகள் - அவற்றின் நிர்ப்பந்தத்தில் செயலாற்றுகிறோம். அதனால்தான் மரண தண்டனையை நான் எதிர்க்கிறேன். ஆனால், மக்கள் தொகைப் பெருக்கமும் குற்ற அதிகரிப்பும் நம்ப முடியாத அளவுக்கு அதிகமாகிவிட்டன. இவற்றுக்கான குற்றவாளிகளை அடைக்கப் போதுமான சிறைச்சாலைகள் இல்லை! தனிப்பட்ட குற்ற உணர்வோ அல்லது கூட்டான குற்ற உணர்வோ எனக்கு அவற்றில் நம்பிக்கை இல்லை. ஒழுக்கமுடைய தனிமனிதன் தீமைகளை, குரூரத்தை, ஏமாற்றுதலைத் தவிர்க்க வேண்டும் என்று நினைக்கிறேன். ஒருவர் உயர்ந்த நன்னெறிகளை வெளிப்படுத்தும் நடத்தையைப் பின்பற்றலாம். அது நம்மைப் பொறுத்த விஷயம்.

## நோபல் பரிசு

எனக்கு ஏன் நோபல் பரிசு கிடைக்கவில்லை என்று உங்களிடம் சொல்லுகிறேன்.

ஐம்பதுகளில் பலமுறை என் பெயர் நோபல் பரிசுக்குப் பரிந்துரைக்கப்பட்டதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால், திடீரென்று ஒரு நாள் ஒரு ஊழல் வெடித்துவிட்டது. ஒரு பெண் - நான் அவளை ஜிப்ஸி என்று அழைக்கிறேன் - ஸ்டாக் ஹோமுக்குச் சென்றாள். அவள், தான் ஒரு சிறந்த ஹோட்டலில் தங்கியிருப்பதாகவும் அது மிகச் சிறந்த வசதிகள் கொண்டுள்ளதாகவும் என்னைத் தொடர்புகொண்டு பேசினாள். மிகப் பெரிய அறை ஒன்றை நான் தங்குவதற்காக ஏற்பாடு செய்திருப்பதாகவும் அதற்கு உள்ளே போக வெளியே வர தனி வாசல் அமைப்பு உண்டு என்றும் சொல்லி என்னைக் கவர்ந்திழுத்தாள். நான் அப்போது புகழின் உச்சியில் இருந்தேன்.

கொண்டாட்டமாக - இதன் அர்த்தம் உங்களுக்குத் தெரியும் - நாள்களை அவளுடன் கழிக்கலாம் என்று கிளம்பிப் போனேன். அவள் என் பெயரை உபயோகித்துப் பலரைக் கூட்டத்துக்கு வரவழைத்திருந்தாள். அவள் பெயரை உபயோகித்திருந்தால் பலர் வர மாட்டார்கள் என்று அவளுக்குத் தெரியும். அந்தக் கூட்டத்தை நடத்தும் விஷயத்தில் அவள் தன் அதிகாரத்தை உபயோகப்படுத்தினாள். வந்தவர்களிடம், “நீங்கள் அங்கே போய் உட்காருங்கள்! நான் கையசைத்தால் ஒழிய யாரும் மிஸ்டர் வில்லியம்ஸ் கூடப் பேச அனுமதி கிடையாது!” என்றெல்லாம் பெருங்குரலில் ஆர்ப்பரித்தாள். மை காட்! இவற்றையெல்லாம் பார்க்கவே பயங்கரமாயிருந்தது!

மறுநாள் எல்லாப் பத்திரிகைகளிலும் மிஸ்டர் வில்லியம்ஸ் ஸ்டாக்ஹோம் வந்திருக்கிறார். அவருக்கு முன்பே அவருடைய சக்தி வாய்ந்த ஏஜென்ட் வந்துவிட்டாள் என்று செய்தி வந்தது. ஆனால், எனது ஏஜென்ட்டான லார்ஸ் ஸ்கிமிட் (இங்க்ரிட் பெர்க்மனின் கணவன்) எனக்குப் போன் செய்து, “உன் பெயர் நோபல் பரிசு கமிட்டியின் முன் இருந்தது. ஆனால், இப்போது எல்லாம் கையை விட்டுப் போய்விட்டது” என்று சத்தமிட்டான். இந்த ஊழல் பத்திரிகையாளர்களின் வெறுப்பைச் சம்பாதித்தது மட்டுமில்லாமல் என் பெயரும் அவளுடன் இணைக்கப்பட்டு நாசமாக்கப்பட்டது!

நோபல் பரிசு கிடைக்காவிட்டால் ஒன்றும் குறைந்து போய் விடுவதில்லை. ஆனால், அவர்கள் ஏராளமான பணம் கொடுக்கிறார்கள்!

## தற்போதைய வேலை

இப்போது ‘அஸ்திவாரமில்லாத வீடு’ என்னும் நாடகத்தை எழுதுவதில் ஈடுபட்டிருக்கிறேன். ஒரு நாடகத்தைத் தயாரிக்கும் போது நான் எல்லாவற்றையும் மறந்துவிடுகிறேன். என் எழுபது வயதைக் கூட. நான் குட்மன் தியேட்டரை மிகவும் விரும்புகிறேன். அவர்களுடன்தான் மறுபடியும் பணி புரிய போகிறேன். இந்த நாடகம் அவர்கள் மூலம் அரங்கேறும். அதன் பின் ‘தெளிவற்றதும் தெளிவானதும்’ நாடகத்தில் சில மாற்றங்கள் செய்து வெளியிடப் போகிறேன். அதில் கிப் தவிர வேறு சில பாத்திரங்களையும் அறிமுகப்படுத்த இருக்கிறேன்.

“சீற்றமும் அமைதியும் நிறைந்த முகமூடிகள்” என்றொரு முக்கியமான நாடகம் இருக்கிறது. தலைப்பு எலினார் வைலியின் கவிதை வரி. அக்கவிதை இவ்வாறு போகிறது:

> சீற்றமும் அமைதியும் நிறைந்த முகமூடிகளில்
>
> வருடங்கள் வரிசையாகச் செல்லுகின்றன.
>
> ஆனால், ஒன்றும் என் பயத்தைக் கவனிக்கவில்லை.
>
> ஒருவரும் என் புன்னகையிலிருந்து தப்பித்து விடவில்லை.

## இளம் நாடக ஆசிரியர்களுக்கான அறிவுரை

நீங்கள் இளம் நாடக ஆசிரியராக என்ன செய்யக்கூடாது? பார்வையாளர்களைப் போரடிக்கக் கூடாது. அதாவது வேண்டாம் என்றிருந்தாலும் ஒரு கொலை நிகழ்ச்சியை, நாடகத்துக்குச் சம்பந்தமில்லாத துப்பாக்கி வெடிப்பை நிகழ்த்துங்கள். அது பார்வையாளரை நிமிர்ந்து உட்கார்ந்து பார்க்க வைக்கும். எப்படியெல்லாம் முடியுமோ, முயலுங்கள்!

## பணக்காரர்கள்

நாடகப் படைப்பில் மிகக் கஷ்டமான விஷயம் என்ன தெரியுமா? வணிக ரீதியாக அது உங்களைச் செலுத்தும் எல்லை, அதிர்ச்சியையும் ஆழ்ந்த ஏமாற்றத்தையும் நடுக்கத்தையும் தர வல்லது. நாடகத்தில் மாற்றங்கள் செய்வதோ, திரும்ப எழுதுவதோ என்னை அயர வைப்பதில்லை - அந்தக் கட்டளைகள் இயக்குனரிடமிருந்து வரும் வரை. ஆனால், பணக்காரர்கள் குறுக்கிட்டால் நீங்கள் பெரும் சோதனையைத்தான் சந்திக்க வேண்டியிருக்கும்.

## என்னுடைய கஷ்டமான நாடகம்

‘ஓர் கோடைக்கால ஓய்வு விடுதி உடைகள்’தான் என்னை மிகவும் சிரமப்படுத்திய நாடகம். ஏனெனில் அதற்கான தரவுகளைச் சேகரிப்பது பெரும்பாடாக இருந்தது. ஃபிட்ஸ் ஜெரால்டையும் ஜெல்தாவையும் பற்றி முழுவதும் அறிவதற்காக நான் நான்கைந்து மாதங்கள் படித்தபடி இருந்தேன். அவர்களைப் பற்றி அவ்வளவு அதிகமான தகவல்களைச் சேகரித்தேன். கடைசியில் அதை எழுதி முடித்ததும் கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் வரும் பகுதிகளை வெட்டியெறிய



வேண்டியதாயிற்று. இதை யாருடைய உதவியும் இல்லாமல் நான் செய்ய வேண்டியிருந்தது. ஒரு மணி நேரத்துக்கான பகுதிகளை நீக்கிய பின் முழு நாடகத்தை மறுபடியும் எழுதினேன். விமரிசகர்கள் கடுமையாகச் சாடிய காட்சி ஹெமிங்வேயையும் ஸ்காட்டையும் பற்றி இருந்ததைத்தான். ஆனால், அது நாடகத்தில் தவிர்க்க முடியாத அம்சம். அவர்கள் இருவருக்கும் இடையே இருந்த மோதல் தவிர்க்க இயலாதது. நாடகத்தை மறுபடியும் எழுதி முடித்த போது அவர்களைப் பற்றிய காட்சி நீளமாக இல்லாமலும் பொருத்தமாகவும் இருந்தது.

## ஜெல்தா ஃபிட்ஸ்ஜெரால்ட்

ஜெல்தாவின் முக்கியமான காதல் ஒரு பிரெஞ்சு விமானியுடன். ஸ்காட் ஃபிட்ஸ்ஜெரால்டுக்கு அவள் இழைத்த ஒரே துரோகம். வேறு யாருடனும் அவள் செல்லவில்லை. அவள் மீது கணவன் கொண்டிருந்த அபரிமிதமான மோகம் அவளை இவ்வாறு செல்லத் தூண்டிவிட்டது. முதல் தடவையாக அவள் துய்த்த பரவசமான உடல் உறவு. ஸ்காட்டுடன் அவளுக்கு இம்மாதிரி நிகழவில்லை. இதை அவளே அவனிடம் சொல்லியிருந்தாள்.

அவளுடைய கண்மூடித்தனமான காதல் வேகம் அந்த விமானியைப் பயமுறுத்திவிட்டது. ஒரு நாள் அவள் மார்பின் பாட்டில்களைக் காலி செய்து தற்கொலை செய்ய முயன்று வாழ்க்கையின் ஓரத்துக்கே சென்றுவிட்டாள்.

ஜெல்தாவுக்கு யூதர்களைக் கண்டால் வெறுப்பு அதிகம். இது அவள் நடித்த என் நாடகத்தில் இடம் பெற்றிருக்கிறது. ஒரு குறிப்பிட்ட பாத்திரத்தை யூதர்களைத் தாக்க உபயோகித்தாள். திரையரங்கில் யூதர் என்னும் வார்த்தையை உபயோகிப்பது தவிர்க்கப்பட வேண்டிய ஒன்று. மிகச்சிறந்த யூதர்கள் அவர்களின் மதம் பற்றிய விமரிசனத்தை ஏற்க முடியாது அதைக் கண்டு அஞ்சுகிறார்கள். எனக்கு யூத வெறுப்பு கிடையாது. ஆனால், எப்போதாவது உலகில் உலவி வரும் அபிப்பிராயங்களை நாடகத்தில் சொல்லாமல் இருக்க முடியாது.

## குழந்தைகள்

எனக்குக் குழந்தைகள் இல்லை என்பதில் மகிழ்ச்சிதான். என் குடும்பத்தில் பல பைத்தியங்கள் உருவாகி இருந்த நிலைமை. எங்கு திரும்பினாலும் குழந்தைகள் வேண்டுமென்னும் மக்களின் வேட்கை. எனக்கு அம்மாதிரி இல்லை என்பதில் நான் அதிர்ஷ்டசாலிதான். நான், டாக்கின், ரோஸ் ஆகிய மூவரும் நேரடி ரத்த உறவு கொண்ட இரண்டு குடும்பங்களைச்சார்ந்தவர்கள்: வில்லியம்ஸ் குடும்பம். டாக்கின் குடும்பம். எங்கள் மூவருக்கும் குழந்தைகள் கிடையா.

## தனிமையை எதிர்கொள்வது

இது சுலபமல்ல. எனக்கு நெருங்கிய நண்பர்கள் உண்டு என்றாலும் சிலருடன்தான் ஒத்துப்போக முடிகிறது. செக்ஸ்? எனக்கு இப்போது அது தேவையில்லை என்று தோன்றிவிட்டது. ஆனால், நான் தனியாக இருக்க முடியாது. அவர்கள் என் மீது அன்பு பூண்டவர்களாக என்னைப் பார்த்துக்கொள்பவர்களாக இருப்பார்கள். உடல் உறவு? நோ.

## சாவு

சாவைப் பற்றி எல்லோருக்கும் அச்சம் இருக்கிறது. எனக்கு அம்மாதிரி இல்லை. நான் அதை ஏற்றுக்கொண்டுவிட்டேன். ஆனால், என் படைப்பு முடியாத வரை நான் சாக விரும்பவில்லை. எனக்கு மன உறுதி அதிகம். கடந்த ஆண்டுகளில் சாவு என்னை நெருங்கிய தருணங்களில் என் மனவுறுதி, எழுதுவதை முடிக்கும் வரை போகக் கூடாது என்ற தைரியத்தை அளித்தது!

**"ஸிந்துஜா"** <weenvy@gmail.com>


ARISE STEEL
உயர்ந்த தரம் உறுதியான கம்பி
SUPER STRONG+
TMT FE 550D
MS SQUARE
MS ROUND
MS ANGLE
MS CHANNEL
MS FLAT
MS BEAM
NOW AVAILABLE ACROSS
TAMIL NADU & KERALA
IS 2830
CML NO. 4568175
IS 1786
CML NO. 3469774
IS 2062
CML NO. 3469875
IS 15911
CML NO. 6700068111
TÜV AUSTRIA
CERTIFIED
GST NO : 33AACCT6738K1Z2
For Sales & Dealership Enquires :
Ph : 90038 25736, 04326 - 279654

# ஹிப்பி

## (குளிர் காடு பெண்ணே - மருதோன்றி வளர் நேசம்)

**ஆதி பார்த்திபன்**

ஓவியம்: **நடேஷ்**

லேலியை பொறுத்தவரை சீசா ஒரு மனிதப் பிராணி; அப்படித்தான் அவனை வைத்திருந்தாள். அவளை பொறுத்தவரை காதல் ஒரு புனித மலசலகூடம் போன்ற ஒன்று. மிக நூதனமாக காதலை கையாளவேண்டும் என்று சொல்லுவாள். எப்படி என்றால், அதனால்தான் சீசாவிற்கு நேரத்திற்கு உணவை வைப்பதைப்போல, காதலை காட்ட வேண்டும் என்று நினைப்பாள். ஒரு நேர சூசி. அது அவ்வளவு நல்லதில்லை என்று சீசா தெளிவு பெற்ற பிறகுதான் பிரச்சினைகள் ஆரம்பமாகின. இது எப்படியென்றால் ஒரு செல்லப்பிராணிக்கு ஞானம் வருவதைப்போன்றதுதான். அது மிருகம். என்ன செய்யும்? முரட்டுத்தனமாக மாறிவிடும்.

“கடிவாளத்தை தேவையில்லாத ஒரு சுமையாக குதிரை நினைக்குமா” என்று லேலி கேட்பாள். “ஒரு குதிரை ஒரு மனிதனின் எண்ணங்களுக்கு பொறுப்பாக முடியாது” என்று சொல்லுவான் சீசா.



இப்படித்தான் ஒரு மிருகம் பெறும் தெளிவு அபாயகரமானது. சீசா அவ்வளவு ஒன்றும் நல்லவனில்லை. ஆனால், கொஞ்சம் மிருகத்தனத்திலிருந்து தன்னை பாதுகாத்து வைத்திருந்தான். அதையும் வெளிக்கொண்டுவரும் அற்புதமான வேலையை லேலி செய்தாள். “நான் உனக்கு சில நேரங்களை ஒதுக்குவேன், நீ காதலித்து கொள். நான் உனக்கு சில காதல் பழக்கவழக்கங்களை சொல்லி தருவேன், நீ காதலித்துக்கொள். காலை ஐந்து மணி தியானம் செய்யும் நேரம். ஓம் என்று சொல்லுவதற்கு பதிலாக எனது பெயரை உச்சரி. நீ என்னை பார்க்காத போதும் காதல் உன்னில் ஒரு நதியின் சுழலைபோல காத்திருக்க வேண்டும். அந்த நேரத்தில் எவ்விதமான மனநிலை இருந்தாலும் அது உன்னை உள்ளிழுத்துக்கொள்ள வேண்டும். என்னை நீ நேரில் சந்திக்க வரக்கூடாது. அது எனது அப்பாவுக்கு பிடிக்காத விசயம். அதை நீ கண்டிப்பாக செய்தால் நான் உன்னைவிட்டு விலகிவிடுவதை தவிர வேறு வழியில்லை. காதலிப்பதை விட இந்த உலகத்தில் முக்கிய பணிகள் உண்டு என்பதை பழக்கப்படுத்திக்கொள். நீ எனக்காக காத்திருக்க வேண்டும். வருடக்கணக்காக என்று நான் சொல்லுவேன். ஆனால், ஒரு யுகமானாலும் நான் சொல்லும் தருணம் மாத்திரம் உனக்கானது. அதை தவிர ஒரு இடையூறு உன்னால் நேர்ந்தாலும் பிறகு உனது விதி அவ்வளவுதான். எனக்குள் இருக்கும் உன்மீதான காதல் செத்துப்போகும் குழந்தாய், முடிந்தது.’

தலையை மேல் கீழாகவோ பக்கவாட்டிலோ அசைக்காமல் பொதுவான ஒரு இயக்க திசையில் அசைத்தான் அவன். "சத்தியம் செய்." மனத்தினுள்ளே வேறொரு விஷயத்தையும் நேரடியாக அவள் கேட்ட விசயத்தையும் சத்தியம் செய்தான்.

இவ்வாறு தன்னை பற்றிய சுயசரிதையின் ஆரம்பப் பகுதியை முடித்துக்கொண்டு, "அன்பு என்பது அத்தனை புனிதமான செயலில்லைதான் அன்பே." பெருவிரல்களால் அழுத்தம் கொடுத்து இடறி கால்களை விரித்தான். "நீ நினைக்கிறாயா நான் அவளை.." "நீ எதுவும் பேசாதே" என்று கனவில் தோன்றும் மலைக்கணவாயை போல இருந்த இரண்டு மார்புகளுக்கும் இடையில் அழுத்தித் தள்ளினாள் ஹிப்பி.

திரும்ப எழுந்து இருக்கும் போது ஒரு மணிநேரம் கடந்திருந்தது. புழிந்து போடப்பட்டிருந்த தோடம்பழ மேற்பகுதியைப்போல வியர்வை கசிந்திருந்தது, முகம் வாடியிருந்தது. படுக்கை விரிப்பின் அருகில் இருந்த முக்காலியை நோக்கி உடலை விழுங்கிய மலைப்பாம்பை போல மெல்ல அசைந்தான். விரல்களால் தடவி கையில் சிக்கிய அந்த பொருளை எடுத்துக்கொண்டான். அது ஒரு தீப்பெட்டி. ஒரே ஒரு தீக்குச்சியை மட்டும் எடுத்து பற்றவைத்து அதை அணைத்து அதன் வெப்பம் மாறாத நிலையில் அவள் நடு மார்புக்கு குறுக்காக ஒரு கோடு, இரண்டு மார்புக்கும் சமாந்தரமாக ஒரு கோடு. குலுங்கி சிரித்தவாறே சொன்னாள், "ஸ்தோத்திரம்."

ஹிப்பி, ஒரு குளிர்ந்த பழத்தை போன்றவள். சிவலிங்கப்பூவின் அதே வளவளப்புடனான சிவந்த உடல் கொண்டலையும் பெண். வியர்வையில் கரைந்து, கண்களின் இருபுறங்களிலும் கரைந்து வழியும் கறுத்த கண் பூச்சை மீண்டும் துடைத்து, கண்களில் இன்னொரு தடவை பூசிக்கொண்டு வளைந்து, மார்புகளில் விழும் கருநாகத்தின் தோற்றத்தில் ஒத்திருக்கும் தலைமுடியை விரல்களால் ஒரு அபிநயத்தின் லாவகத்துடன் சுழட்டி, தலையில் முடிந்துகொண்டாள். பிறகு தென்றல் காற்றின் மேல் அடிப்பில் எழும் இலவம் பஞ்சின் மென்மையுடன் சீசா மார்புக் காம்பில் தனது ஆட்காட்டி விரலால் ஒரு அழுத்தம் தந்தாள். "உனக்கு தெரியுமா சீசா, ஒரு ஆணின் மார்க்காம்பை சரியாக கையாளத் தெரியாதவள் அழகியல் தெரிந்த பெண்ணே இல்லை" என்று சொல்லிவிட்டு வலது கண்ணை சிமிட்டினாள். உலகின் பேரிருளில் இரண்டு ஜோடி மின்மினிகள் மட்டும் எதிர் எதிராக உயிர்ப்பதைப்போல இருக்கும்.

ஹிப்பியை அவன் ரகசியமாக நேசித்தான். லேலி மீதிருந்த அருவருப்பின் நிழல் ஹிப்பியின் கூந்தலில் புதையுண்டிருப்பதாக நினைத்தான். அதன் பேருண்மையை கண்டறிய மறுபடி மறுபடி அவள் கூந்தலுக்குள் கைகளை நிறைத்து கோதி சேர்த்திழுத்து அவளுடன் முயங்குவது வெகுவாக அவனுக்கு பிடித்திருந்தது.

சீசா, இந்த பூமியை மனநிறைவுடன் எப்பொழுதும் பார்த்ததில்லை. இந்த பூமி அவனுக்கு எதை தந்துவிட்டது? நல்ல நண்பர்களையோ நல்ல காதலிகளையோ நல்ல சமூகத்தையோ என்றால் just fuck என்று முடித்துக்கொள்வான். "ஒரு சிறிய விலங்குக்குள்ள அந்த வெளி என்னிடம் இல்லையே" என்று அங்கலாய்த்து கொள்வான். இந்த பூமியில் எதைக்கொண்டு நிறைத்தாலும் அவனை நிரப்பி வெற்றிகொள்ள இயலாது. அவ்வளவு வெறுமையான மனிதன் தான் இந்த சீசா. ஒரு சமயம் அவனுக்குள் எழும் அன்பின் தாகம் பிரபஞ்சத்தை கொண்டு ஈடுசெய்யவும் முடியாமல் ஆர்ப்பரிக்கும்.

அப்படிபட்டவனை அவள் கண்டடைந்தாள். மிக எளிமையான முக தோற்றத்தை உடைய அவனை இலகுவாக ஒரு மனித மிருகம் என்று அடையாளம் கண்டுகொள்ள முடியாது. அவன் மிகவும் உணர்ச்சிவசப்பட்டவனாக அவளுக்கு தெரியவில்லை. அவனது முகம் நன்கு பழுத்த துறவியைப்போல இருந்தது. இந்த பூமியில் பார்த்தவுடனே யாராவது ஒருவர் ஏதோ ஒரு காரணத்துக்காக காதல் செய்யப்படுவார் தானே, அந்த காரணம் எது? ஆயிரம் இருக்கும்.

உதடுகளின் கீழ் ஒரு இன்ச் கீழே நாடியின் மேல் ஒரு புள்ளி அளவு மச்சம்/ தூரமாக நின்று பார்க்கும் பொழுது ஒரு பட்டாம்பூச்சியை ரசிக்கும் குழந்தை போல ஒளித்திரிந்த கண்கள்/ பரந்த தரைகளில் சிலகண்ணுக்கும் தெரியாத அங்கிகள் தனது பாதம் பட்டு இறந்து விடுமோ என்ற பயத்தில் அந்தரத்தில் நடக்கும் அன்பே உருவான ஒருத்தி/ இந்த பூமியின் கலவை பாண்ட கலாசாரங்களை உடைப்பதற்கு புரட்சி செய்பவள்/ காற்றுடன் ஆக்ரோசமாக போராடும் அவளின் சுருள் விழுந்த முன் முடி/ இரத்த நரம்புகள் புடைக்கும் ஒருத்தியின் விசாலமான கண்/ வானத்தை நோக்கி அவள் நீட்டி இருப்பாள் தனது நடுவிரலை/ ஒரு பாப் கட் வைத்த பாப் பாடகி/ வியர்வை வழியில் உடலுடன் மண்குடத்தை சுமந்து மைல் கணக்கில் நடந்து நீர் கொண்டுவரும் பெண்/ சொடுக்கினால் தீயை உருவாக்குவதை போல சிவந்திருக்கும் நீண்ட விரல்கள்/ சீன ஆப்பிள்களை போன்ற ஒரு மார்பு/ கனவுகளில் விரல்களால் தடவி இனம்காணும் பித்தளையால் ஆனா கடவுள் சிலையை போன்ற வலிந்து வழுவழுத்த இடை.

இப்படி எதை பார்த்தாவது காதல் கொள்ளலாம். எல்லையை உடைக்கும் காதலும் எல்லைக்கு வெளியே தாவும் காமமும்தான் இந்த வாழ்வின் தத்துவம். இது நீதியானது இல்லை என்றாலும் காதலுக்காக ஏற்றுக்கொள்ள வேண்டும். ஏனென்றால், ஒருவனின் மனதில் தோன்றும் காதல் என்பது நீதியானது.



“உனக்கொன்று தெரியுமா ஹிப்பி, எனது அப்பா மிகசிறந்த காதலர். ஆனால், இந்த உலகம் அவருக்கு எதை தந்தது என்றால் எதையும் இல்லை என்றுதான் சொல்லுவேன். அப்பாவிடம் ஒரு நாள் எது காதல் என்றேன். ‘நமக்கு விதிக்கப்பட்டது அவ்வளவுதான் என்று நாம் உறையும் போது வாழ்க்கை ஒரு சூரியனை தரும். அந்த சூரியன் போன்றதுதான் காதல்’ என்றார். நான் அதை புரிந்துகொள்ளவில்லை.

“‘ஒரு பெண் பற்றிய தேடலொன்றை நான் எப்போதும் நிகழ்த்தியதில்லை. அதை உண்மையாகவே ஆபத்தானதாகதான் கருதுகின்றேன். எனக்குள் இருக்கும் பெண் தான் இந்த பூமியின் அனைத்து பெண்களினதும் பிரதிநிதி. அறியாமையில்தான் அவளை நான் எனக்குள் வளர்த்தெடுக்கின்றேன். அவளை நான் உணர்ச்சிகளின் சுருள் என்று எப்போதும் நம்புவதில்லை. அவள் அறிந்து கொள்ளுதலின் எல்லை தாண்டி வளர்ந்து நிக்கின்றாள் எனக்குள். ஆக நம்மால் காதலிக்கப்படும் எந்த பெண்ணையும் நாம் சமூகத்தில் இருந்து தேர்ந்தெடுக்கின்றோம் என்றா நினைக்கின்றாய். இல்லை, அவள் ஏற்கனவே நமக்குள் வளர்ந்து நிற்பவள் தான்’ என்றார்.

“இப்போதும் எனக்கு புரியவில்லை. நான் மிகவும் அறியாமையுடன் அவரை பார்த்தேன். அவர் மிகுந்த போதையில் இருந்தார். என்னை அழைத்து அருகில் அமரச் செய்தார். இரண்டு விரல்களுக்குமிடையில் சிகரெட் புகைந்து கொண்டிருந்தது. புகையை உள்ளிழுக்காது மிகுந்த சிரமத்துடன் சுவாசித்துக் கொண்டிருந்தேன். இறுக்கமாக தொடையில் அடித்து என்னை விழிப்படைய செய்தபின், “இந்த உலகத்திலேயே மிகவும் பெறுமதியான வார்த்தை எது தெரியுமா’ என்றார். நான் அவர் கண்களை பார்த்தேன். மிகவும் இறுக்கமாக ஈரலிப்பே இல்லாமல் வெயில் கால செம்மண் தரையைப்போல இருந்தது. நரம்புகள் வேர்விட்டிருந்தது.

“‘மிகவும் பெறுமதியான ஒரு வார்த்தை இல்லை, ஒரு வாக்கியம்; எந்த சந்தர்ப்பத்திலும் நீ மறக்க கூடாது. உனது தகுதியை அறிந்து கொள். yes இந்த உலகத்திலே பெறுமதியான வாக்கியம் இதுதான். எந்த சந்தர்ப்பத்திலும் அதை நீ ஞாபகம் வைத்துக்கொள். அது உனக்கு எப்பொழுதாவது தற்காப்பொன்றை வழங்கும். அப்பா சொல்லுறன் எண்டதுக்காக இல்லை. ஏனென்றால் நமக்குள் இருக்கும் கருத்துக்கள் மாற்ற முடியாததில்லை. அதை நானே சில சந்தர்ப்பத்தில் மாற்றி விடக்கூடும். நீ யோசிக்காதே. நீ இதை செவிகொடுக்கவேண்டும் என்பது எப்போதும் எனது விருப்பமில்லை. உனது தலைவன் பற்றி உனக்கு எப்போதும் விமர்சனம்

எழவில்லை என்றால் நீ சரியான தலைவனை தேர்ந்தெடுக்கவில்லை என்று அர்த்தம்' என்றார். 'உனக்கு அது புரியாது. சரியான வயது வரும்போது அதை நான் உனக்கு சொல்வேன்' என்றார்.

"எனது அப்பாவின் சிநேகிதர்கள் பலர். எனக்கு நினைவு தெரிந்த நாட்களில் இருந்தே ஒன்று இரண்டு பேர் இருக்கின்றார்கள். அப்பாவின் சிநேகிதர்கள் பலர் கம்யூனிசம் பேசும் மாற்று இயக்கங்களில் உறுப்பினர்கள். அவர்களது கம்யூனிசம் எதற்கு பயன்பட்டது என்பது எனக்கு தெரியாது. ஆனால், அப்பாவிடம் எப்போதும் பழைய கதைகளை அறியமுடியாது. எதையும் எனக்கு சொல்ல கூடாது என்பதில் தீர்க்கமாக இருப்பார். அதனால்தான் அவர் மிகுந்த போதையில் இருக்கும் போது நான் அவருக்கு அருகில் இருப்பதை விரும்பினேன். எதாவது ஒரு கதையை சொல்லுவார். ஆனால், அவை பெரும்பாலும் சாகச கதைகள் போல் வடிவமைப்பை உடையவை. அதனால் அவற்றை நான் நம்புவதில்லை. எப்படியென்றால், சரி விடு, நீயும் அதை நம்பமாட்டாய்."

"ஓம் நான் உண்மையாகவே பெரிதாக வாய் வழிக்கதைகளை நம்புவதில்லை. இருந்தாலும் நீ சொல்வதை கேக்க விரும்புகின்றேன்."

"அது ஒரு காதல் கதை. அதை கொஞ்சம் அழகுபடுத்தி சொல்லலாம். ஆனால், அவசியமில்லை. டானியல் அவரது மிக நெருங்கிய சிநேகிதன். ஒரு கோவில் திருவிழா காலத்தில் அவளை சந்தித்தான். உடல் ஒரு பிரபஞ்ச வெளியென்றால் காதல் என்ற உணர்ச்சி ஒரு கற்பூர படிகத்தை போன்றது தானே. அந்த காதலின் இடையில் எத்தனையோ தடைகள் அவனுக்கு இருந்தது. திருவிழாவில் ஆரம்பித்த காதல். பின் ஒவ்வொரு வெள்ளி தினங்களிலும் கோவிலுக்கு செல்வதை வழக்கப்படுத்திக் கொண்டான். ஆனாலும், ஒரு கம்யூனிஸ்ட் கோவிலுக்கு செல்வது ஒரு தற்கொலை குண்டுதாரியின் சன நடமாட்டப் பிரதேச விஜயத்திற்கு ஒப்பானது. அந்த கோவிலை சுற்றி நிறைய மஞ்சள் கொன்றைகள். கோவிலின் வலது பக்க தெருவில் பழைய கொன்றை மரமொன்று தனியாக இருக்கும். காலை பூஜைகள் முடிந்தவுடன் அவன் காத்திருக்கும் கொன்றை மர நிழலுக்கு அவள் வந்து சேர்வாள். இப்படி பெரிய விளக்கங்களுடன் எனது நண்பன் இந்த கதையை சொல்லி இருப்பான் என்று நீ நினைக்காதே. இது பின் கண்டுபிடிக்கப்பட்ட டயரிக் குறிப்பு... குறிப்பு மிக தெளிவாக இல்லை. ஆனால், இவ்வளவு தெளிவாக இந்த கதை அமைவதற்கு ஒரு காரணம் இருக்கின்றது. அதை கதை முடியும் போது நீ தெரிந்துகொள்வதற்கே விரும்புகின்றேன்.

"*குறிப்பு 1:* நான் உன்னுடன் பேசும் இந்த ஒரு பத்து நிமிடங்களில் தான் எனது காயங்களின் மேல் கட்டியிருக்கும் துணிகள் அவிழ்கின்றன. காற்று அந்த காயத்தில் படும் போது உணர்வோமே ஒரு சிறு சுனைப்பு. உள்ளே அப்படி ஒரு தருணம் நிகழ்கின்றது. அந்த சுனைப்பை விரல்களால் அழுத்தி தேய்த்து சுகம் கொடுப்பதை போல நீ உரையாடுகின்றாய். ஆனால், காயமோ மாறாமல் இன்னும் ஒரு துளி அதிகமாகி கொண்டே இருக்கின்றது.

"அமைதியாக அவள் சிரிக்கின்ற பொழுது சூரிய ஒளி பட்டு தெறிக்கும் கொன்றை மஞ்சள் அவளது முகத்தில் விழும்.

"இது சரியானது இல்லை என்று அவன் சொன்னான். 'இந்த காதல் நமக்கு பலிக்களம். நீ அதை புரிந்து கொள்ளவேண்டும். பேசாமல் என்னை கருணைக்கொலை செய்துவிடு' என்றாள் மிக ஆழமாக. "என்னால் தற்கொலை எல்லாம் செய்யமுடியாது. நான் வாழவேண்டும். அந்த தைரியம் என்னிடம் இருக்கின்றது. அதனால், நீ என்னை கருணைக்கொலை செய்.'

"அவளை அவனால் சமாதானப்படுத்த முடியாது. ஏனென்றால் அவள் பெண். நீரைப் போன்றவள். எத்தனை எத்தனையோ கழிவுகளை அவளில் எறிந்தாலும் அவள் தன்னை தெளிவாக வெளிப்படுத்துவாள். அடங்க மாட்டாள். வெறுமையானவள். கொட்டித்தீர்க்கும் அத்தனையும் எடுத்துக்கொள்வாள். சமாதானம் செய்வது வீண்போக்கு. அதை அவன் அறிவான். ஏனென்றால், ஒரு பெண் தீர்க்கமானவள். அவள் அடைந்துகொள்ள எத்தனிப்பதை மீள் பரிசீலனை செய்துகொள்ள அவள் தன்னை அழித்துக்கொள்வதால் தான் சாத்தியம்.

"'நான் உனக்காக நாளை வரை காத்திருப்பேன். நீ எனது வீட்டுக்கு வா. நீ தைரியமானவன். இதை கடினமாக நினைக்காதே. நான் உனக்காக இந்த குறிப்பிட்ட நேரத்தில் நிச்சயமாக காத்திருப்பேன்' என்றாள்.

"அவனால் வேறெதுவும் சொல்ல முடியாது. கீழாகவோ மேலாகவோ பக்கவாட்டிலோ தலையை ஆட்டாமல் பொதுவான ஒரு திசையில் அசைந்தான்.

"பின் ஒரு நாள் அவளை அவன் சந்தித்தான். அது இறுதித் தீர்ப்புநாள். வானம் கருமேகங்களை அடர்த்தியாக்கும் பொழுது ஒரு சிறுவன் கூரை வீட்டின் முத்தத்திற்கு நடந்து வருவான். நிசப்தம். வானத்தில் ஒரு பறவை ஒரு மௌன அசைவில் சிறகுகளை விரித்து காற்றின் திசையில் கீழிறங்கும். சிறகின் அடிப்பிருக்காது. சிறுவனின் விழிகள் விரியும் மனம் கிறுக்கப்படாத விரிக்கப்பட்ட தாள். தூய்மையான ஒரு விழிப்புணர்ச்சி தான், ஆனாலும்

துக்கத்தின் சாயல்.

“வாழ்வின் மொத்த அனுபவங்களையும் இறக்கி வைத்த துறவியின் மனநிலையை போல அன்று எனக்குள் ஒரு மௌனம். ‘அவனை போடப்போறாங்கள்’ என்று சதா சொன்னான். ‘அவன் எங்க போயிட்டான்.’ ‘இப்போது எல்லாம் நடந்து முடிந்திருக்கும்.’ ‘நாயே உனக்கிது முதலே தெரியுமா.’ ‘இல்ல ஆனா கேள்விப்பட்டன்.’ ‘நாயே முதலே சொல்லி இருக்கவேணாமா. வேளைக்கு வா. எங்க போயிருக்க போறான். ஆகமிஞ்சினா கோவிலடி. மோட்டார் சைக்கிளை எடு.’

“‘நின்சாக் கட்டையை எடுத்து சுருட்டி குரொகோடில் ஜீன்ஸ் இடுப்பு பகுதியில் சொருகினேன். ‘போ வேளைக்கு..’ சரியாக மழை. அடர்ந்த மேகம் மெல்லிய கறுப்பை எங்களுடைய மோட்டார் வண்டியின் பின் விரித்துகொண்டு வந்தது. கொஞ்சம் நாங்கள் நிறுத்தியிருந்தாலும் அந்த இருள் எங்களை மூடியிருக்கும். ஆனால், அவ்வாறு ஆகவில்லை rally வகையை சேர்ந்த அந்த மோட்டார் சைக்கிள் தனது வழமையான முறுக்க இசையை பிழிந்தபடி காற்றை கிழித்து வந்து சேர்ந்தது. இரைச்சல் தூரமாய். மணலை தாண்டி மரம் கானல் நீரில் மிதப்பதைப்போல தெளிவில்லாமல் தோன்றியது. அதிவேகத்தில் மோட்டார் சைக்கிளை விழுத்திவிட்டு அந்த குறிப்பிட்ட இடத்தை நோக்கி விரைந்தோம். அங்கே ஜனக்கூட்டம் சூழ்ந்திருந்தது. அவர்களை விலக்கி உள்நுழைந்த போது கருமேகம் முதுகில் ஏறிக்கொள்ள அவனது உடல் குப்புறக் கிடந்தது. அவன் சுடப்பட்டான். மணல் திட்டுக்களில் சிதறியிருந்த இரத்தம் காய்ந்து அவனது தலை பகுதியை சுற்றி தெளிக்கப்பட்டிருந்தது. ஜனநெரிசலை விலக்குவதற்காக எனது நெஞ்சாக் கட்டையை சுழற்றினேன். ‘போங்கடா மயிறுகள்.’ எல்லோரும் கலைந்து சென்ற அரைமணிநேரம் நிசப்தம். முழந்தாளிட்டு அவனது முகத்தை பார்த்தேன். அரும்பிய தாடி. நாடிப்பகுதியில் ஒரு குண்டு ஆழமாக இறங்கியிருந்தது. அவன் புன்னகைத்து இறந்தது ஓரளவு விளங்கிக்கொள்ள முடிந்தது. முழுமையாக எச்சிலை முழுங்கிக்கொண்டு வாந்தி உணர்வுடன் கூடிய அந்த வார்த்தையை சொன்னேன். ‘அவன போடவேணும் சதா. இத விட மோசமா.’ ‘ஆனா இப்ப நிலைமை சரியில்லை. அவங்களுக்கு ஆக்களிண்ட செல்வாக்கு எப்பிடி இருக்கெண்டு தெரியும் தானே.’”

“எனது அப்பாவையும் அவர்கள் தான் கொன்றார்கள். ஆனால், அது ஒரு நீதியான கொலை என்றுதான் நினைக்கிறன். ஏனென்றால், அவர் ஒரு தலையாட்டியாக வேலை செய்தார். ராணுவத்தின் ஒற்றன். அவரால் அவர்களில் பலர் காட்டிக் கொடுக்கப்பட்டு சுடப்பட்டார்கள். அதில் மிகவும் அப்பாவியான எனது காதலனும் சுடப்பட்டான்.

“உனக்கொன்று தெரியுமா அவன் எந்த இயக்கத்தையும் சேர்ந்தவனில்லை; கிறிஸ்துமஸ் நாளில் நத்தார் வேடம் போட்டவன். நாங்கள் காதலிப்பது ஒரு முறை அப்பாவுக்கு தெரிந்தவுடன் என் பொருட்டு ஒரு தடவை தலையாட்டியதால் அவன் சுடப்பட்டான். நத்தார் ஆடைகளுடன் அவன் துடிதுடித்தான். எனது கண்முன் அது நிகழ்ந்தது. நான்கு தோட்டாக்கள். யாரும் அவனது உடலை உரிமை கோரவில்லை. மூன்றாவது தினம் மழை பெய்து அவனது உடல் உப்பியிருந்தது. ஒரு கிணற்று தவளையை போல அது வளைந்து ஒடுங்கி கிடந்தது. பச்சை ஓலையால் செய்யப்பட்ட பாயினால் சுருட்டி அவனது உடலை அப்புறப்படுத்தியபோது அவனுக்காக அழ யாருமில்லை. கூட்டத்தின் ஒரு திசையில் நின்று ஒரு சிறுமி அழுதாள். அழுது கொண்டு நின்றாள். அவனை போலவே மண்ணிற கண்கள் அவளுக்கு. அவனை போலவே கன்னத்தில் குழிச்சிரிப்பு. ஆக உயிருக்கு உயிர் என்ற கொள்கை நீதியானதென்றே நினைக்கிறன். மேலும் அவர்களை எனக்கு பிடிக்கும். நேசிக்கப்படும் ஒரு கூட்டத்தின் வன்முறைகள் கூட அங்கீகரிக்கப்பட வேண்டும் என்பது எழுதப்படாத நியதி. வன்முறையால் எழுதப்படும் வரலாறுகள் பெரும்பாலும் வேறு வேறு உணர்வை தரும் என்று சொல்ல முடியாது. ஆயுதங்கள் உடல் இடம் தான் மாறுபடும். நானும் தான் அது பற்றி படித்தேன் ஆனால், இது வேறு உடல்.”

“..உனது அப்பா மிருகத்தனமாக அவனை கொலை செய்தாரா; அவள் கணவனை, அவள் குழந்தையை.”
“yes brutally..... அவன் கொலை செய்யப்பட்டான். ஆனால், இப்பொழுது வரை அவன் வாழ்ந்து கொண்டிருப்பதாக எல்லோரும் நம்புகின்றார்கள்.”
“ஆக உனது அப்பா ஒரு கொலைகாரன் என்பது உனக்கு கொஞ்சம் கூட வேதனையாக இல்லையா?”
“இல்லை வாழ்தல் என்பதே வன்முறை மீதான புரிதல் தானே. நன்றாக உப்பிட்டு வெயிலில் உலர்த்தப்பட்ட பாகங்கள் சுற்றிவர உள்ள கடற்கரைகளில் யாரும் அறியாது பதப்படுத்தப்பட்ட அவனது உடல், உனக்கு தெரியுமா அது ஒரு மனிதக் கருவாடு என்று அப்பா சொன்னார். சகிக்க முடியாத ஒரு வாடை. மொத்தமாக கெட்டுப்போன கருவாடுகளுடன் அதனை ஒன்றாக்கி பின் உரமாக்கும் தொழிற்சாலைக்கு கொண்டுசெல்லப்பட்டது. இவ்வாறாக துரோகிகளுக்கு மிக கலைநயமாக ஒரு கொலையை நிகழ்த்துவதில் அவர் திறமைசாலியாக இருந்தார். அதனால்தான் அவரை எல்லோரும் பெரிய தோழர் என்றார்கள்.”

“அப்படியென்றால் அந்த குழந்தையையும் கொன்று விட்டாரா. அதற்கும் இவ்வாறான தண்டனை தான் கிடைத்தது என்கிறாயா?”
“இல்லை, இல்லை. அந்த குழந்தை ஒரு சுதந்திர

ஆன்மாவாகவளர்க்கப்பட்டது,வளர்க்கப்படுகின்றது. ஒவ்வொரு சுதந்திர ஆன்மாவுக்குள்ளும் எல்லையற்ற வெறிகொண்ட மிருகமும் வளரும். காரணம் அதீத குரூரமும் அதீத அன்பும் கொண்டவன் தான் மனிதன் இல்லையா. நீ நினைக்கின்றாயா நாம் எல்லோரும் ஒரு தருணத்தில் அன்புக்காக மட்டும் பழக்கப்பட்டவர்கள் என்று. உன் மனசாட்சியை தொட்டு சொல். உன்னால் அதிகம் நேசிக்கப்பட்ட மனிதனை விதம் விதமாக கொலை செய்வது பற்றி உனது மனது சிந்திக்கவில்லையா? குறைந்த பட்சம் கழுத்தை நெரிப்பது பற்றியாவது. அந்த கொலைக்கு பின்னால் ஒரு நாள் நான் அறிந்துகொண்டேன்,

"எனது அப்பாவால் கொலைசெய்யப்பட்டது வேறு யாரும் இல்லை. அவர் தான் எனது அப்பா. எனது அம்மாவின் நாட்குறிப்பை ஒரு நாள் வாசிக்க நேர்ந்த போது, அந்த பெண், அவள் எனது அம்மா. இத்தனைக்கும் அமைதியான ஒரு ஆத்மா. அதன் இருப்பை சிதைத்தது அந்த மிருகம். அதன் பிறகு ஒவ்வொரு நாளும் உனக்கு தெரியுமா, இன்று காலை வரை அவர்களை விதம் விதமாக கலைநயமாக ரசித்துக் கொல்வது பற்றி சிந்திக்கின்றேன். எனது அம்மாவை, எனது அப்பாவை. அவர்களுடைய ஒவ்வொரு அசைவுக்கு பின்னாலும் அவர்களுடைய சாவு நேர்த்தியாக பத்திரப்படுத்தப்பட்ட ஒரு ரகசிய நிழல் மிருகத்தின் வாலைப் போல பின்தொடர்கிறது. ஒரு தடவை துருவேறிய கூர்மையான கத்தியை எனது அப்பா கண்டுபிடித்தார். அதை நான் பத்திரமாகஒளித்துவைத்திருந்தேன்,அந்த புத்தகத்தின் நடுவில். ஆனால், எப்படி அவருக்கு அந்த புத்தகம் விருப்பத்துக்குரியதாக மாறியது என்று நான் மீண்டும் மீண்டும் கேட்கிறேன். அவரது வாழ்க்கையில் அவர் வெறுத்த காந்தியின் சத்தியசோதனையை திறக்க வாய்ப்பே இல்லாத போது எப்படி சாத்தியம்."

"உனது உண்மையான அப்பா கொலை செய்யப்படுவதற்கு முழுமையான தகுதியுள்ளவர் தான். ஆனாலும், அவர் உனது அப்பா என்ற சிந்தனை உனக்குள் முழுமையாக சிதைத்திருப்பது உனது அறத்தை இல்லையா? உன்னை அவர்கள் ஒரு பறவை போல சுதந்திரமாக வளர்த்தார்கள் இல்லையா?"

"இல்லை ஒருபறவை கொலையை சிந்திப்பதில்லை. மேலும் பறவை போல இல்லை நான். பறவைகள் எல்லாவற்றையும் நேசிப்பதில்லை. பறவைகளின் சுதந்திரத்தை அதன் பறத்தலின் எல்லைகளே தீர்மானிக்கின்றது என்பதை நீ அறிவாயா? பறவைகள் பற்றி சொல்வதென்றால் என்னை பொறுத்தவரையில் பறவைகளை மனிதர்களுடன் மட்டுமே வைத்து பார்ப்பேன். நீ எந்த வகையான பறவை? அதை சொல்வதற்கு நீ எனக்கு பறவைகளை உனது மனதில் எவ்வாறு வைத்திருக்கின்றாய் என்பதை நீ சொல்லித்தானே ஆகவேண்டும்" என்றாள்.

"நான் உனக்கு நான்கே பறவைகளை சொல்கிறேன். முதலாவது கூண்டில் இருக்கின்ற பறவை. அது வானத்தை பார்க்கும் விதம். அதற்கோ இந்த வானம் பூமி எல்லாமே கம்பிகளின் வெளியே மிக தூரத்தில். ஆசையின் உச்சகட்ட உந்துதலையும் அதன் மனம் நிலைத்திருக்கும். அடுத்தது சரணாலயத்தில் இருக்கும் பறவை. அது அதன் கீழுள்ள வனத்தை பார்க்கும் விதம். அதோ தன்னை சுதந்திரம் பெற்றதாக எண்ணிக்கொள்ளும். அது முழுவானத்தையும் முழு பூமியையும் தனது சுதந்திர உணர்வாக எண்ணுவதில்லை. அதன் சுதந்திர உணர்வு அதன் எல்லைக்குள் இருக்கின்றது. ஆனால், அதன் எல்லை அதன் மனதிற்குள் இருக்கின்றது. மூன்றாவது சமுத்திரத்தை கடக்கும் பறவை. அது சமுத்திரத்தை பார்க்கும் விதம், ஆம் அதை நீ சுதந்திரமுள்ளது என்று நினைக்கின்றாயா. இல்லை, அதன் வலிமை தான் அதன் சுதந்திரம். அதன் சுதந்திரத்தின் எல்லையில் அதன் மரணம் காத்திருக்கலாம். நான்காவது பறவை தான் வானத்தை கடக்கும் பறவை. அதன் ஆயுள் முழுதும் அது இந்த பூமியை பார்க்கும் விதம், அது நான், நிச்சயமாக நான் என்கிறேன். எனது சுதந்திரம் எதையும் தீர்மானிப்பதில்லை. எதை நோக்கியதுமில்லை. அது சுதந்திரத்தையே நம்புவதில்லை. அதன் விபரிப்புகளையோ விளக்கங்களையோ நம்புவதில்லை. அது பறந்தலை நம்புகிறது. அதுதான் உண்மை.

"வாழ்க்கையின் அத்தனை தருணங்களிலும் நான் பறந்துகொண்டிருந்தேன். ஹிப்பி உனக்கொன்று தெரியுமா. எனது பயணக் குறிப்புகளே எனது மொத்த வாழ்வுக்கான அடையாளம். நான் எழுதுகின்றேன். அந்த எழுத்தில் எல்லா மனிதர்களும் சொற்கள். வெறும் சொற்கள். எனது தந்தை, தாய், காதலி. எனது தந்தையை நான் கொலை செய்ய முயற்சித்த காலத்தில் ஒரு நாள் அவர் அதை அறிந்துகொண்டார். 'நீ என்னை கொலை செய்வதற்கான முடிவை தெளிவாக எடுத்திருந்தால் அது எப்போதோ நிகழ்ந்திருக்கும். ஆனால், உனது உள்ளத்தில் இரக்கத்தின் கேவல் மிஞ்சுகிறது. ஒரு நல்ல கொலைகாரனால் ஒரு துப்பாக்கியை ஏந்துவதற்கு அவனது இதயம் முழுமையாக ஒளி பெறவேண்டும். நம்பிக்கையின் ஒளி. நாம் செய்யும் குறித்த செயல்களுக்கு மாத்திரமே நம்பிக்கையின் ஒளியை பலியாக்கிவிடுகின்றோம். அந்த செயல்களை நல்ல செயல்கள் என்ற வரையறைக்குள் வைத்துவிடுகின்றோம்.'"

நேர்த்தியாக அவளது கரங்களை பற்றிக்கொண்டேன். மெழுகிடப்பட்ட கருங்கல் சிலையின் வளவளப்புடன் இருந்தது. ஆனால், கொஞ்சம் உயிர் துடித்துக்கொண்டிருந்தது.

"ஹிப்பி உனக்கொன்று தெரியுமா? ஆத்மார்த்தமாக அவளை நேசித்தேன். அவளது உடலின் வாசனையில் குங்கிலியம் கமழும். அவளது சில்க் புடவையில் எலுமிச்சை வாசம் வீசும், அவளது



வியர்வை வாசம். ஒரு நாள் மாலை என்னை அழைத்து எல்லாமே முடித்துக்கொள்ளலாம் என்றாள். எப்படி அது முடியும்? அன்று அவளது பிறந்த தினம். இல்லை முடியாது. உன்னை கொலை செய்துவிடுவேன் என்று மிரட்டிப் பார்த்தேன். ஒரு வளர்ப்பு நாய் சேமித்து வைத்திருக்கும் மிருக வெறி அது. எனது கண்களில் நீர் வழிந்தது. மறுகணமே, 'இல்லை என்னை விட்டுவிடாதே என் உயிரே. இனிமையே, நிறைவே, எனக்கு நீயே எல்லாம். என்னால் உன்னைவிட்டால் எப்படி வாழ முடியும் சொல். please i cant breath my dear. அப்படி சொல்லாதே. please. இல்லை உனது காலில் எத்தனை நாட்கள் தான் நான் விழுந்தே கிடக்க நீ பிரியப்படுகிறாய். ஆக நீயே எனது இறப்பையும் நீயே என்மேலான கருணையையும் முடிவு செய்கிறாய். உனக்கு அத்தனை அதிகாரம் இருப்பதை நீ காதல் என்று சொல்கிறாய். சீ நாயே' என்றாள். 'அப்படி இல்லை லேலி. என்னை மன்னித்துவிடு. உன்னை நான் நேசிக்கிறேன். அதனால் நீ என்னை நேசிக்க வேண்டும்.' 'சீ மறுபடி.' 'இல்லை லேலி, நீ என்னை விட்டு போனால் நமது அந்தரங்க புகைப்படங்களை உனது தந்தைக்கு தபாலில்..' 'சீ. ஏன் இப்படி?' 'லேலி உறுதியாக சொல்கிறேன், இனியும் உனக்கு நான் அடிமையாக இருக்க முடியாது. முடித்துக் கொள்வோம் ஆனால், நான் ஒரு முற்போக்குவாதியாக இருக்கிறேன் அதனால் நான் ஒரு எழுத்தாளன். அதனால் நாங்கள் புரிந்துணர்வுடன் பிரிந்து விடுவோம். நாங்கள் எமது தோழர்களுக்கு மனமொத்து பிரிந்ததாக அறிவித்து விடுவோம்.'

"சிரித்தாள். என்னை ஒரு புழுவை பார்ப்பதைபோல பார்த்தாள். ஆனால், மீண்டும் அமைதியாக அவளது கண்களில் நீர் ஒழுக என்னை பார்த்து, 'நீ ஒரு கொடிய மிருகம் தெரியுமா.' 'இல்லை லேலி. எனக்கு உனது தோழியை பிடித்திருந்தது. அவளுக்கும் தான். அதனாலென்ன உன் மீதான பிரியங்கள் நோய் கண்டுவிட்டதா என்ன. ஆனால், மனமொரு நோய்.'

"நடுக்கத்துடன் அவளை மீண்டும் அணைக்க முயன்றேன். உந்தித் தள்ளினாள். பின் அணைத்துக்கொண்டாள். நான் முழுமையாக கலங்கினேன். மெல்ல காதில் வந்து கிசுகிசுத்தாள். 'உனக்கு ஒரு பெண்ணின் பெறுமதி தெரியவில்லை. ஏனென்றால் நீயொரு கீழான மிருகம். நீ என்னவும் செய்துகொள். உன் வன்முறையை உனது கருணையை எதையும். நான் இனி மதிக்கப் போவதில்லை. செல்...'

"ஒரு பெருமூச்சை ஓங்கி இழுத்து விட்டேன். 'சரி போ.' இப்போது சொல் ஹிப்பி, நான் ஒரு மிருகமென்று நீ நினைக்கிறாயா. ஒரு சுய பரிசோதனை எனக்கு தேவையாக இருக்கின்றதா. நீ சொல்லு ஹிப்பி."

அவளது கூந்தலில் ஒரு பகுதி எனது மார்பில் வியர்வையில் சலசலத்தது. "இங்கே மிருகத்தனம் என்பது வன்முறையின் வரையறையில்லை. குறிப்பாக எனக்கு உனது மிருகத்தனங்கள் பற்றியோ உனது மேலான கருணை பற்றியோ அக்கறையில்லை." இறுக்கமாக அணைத்துக்கொண்டாள். இரண்டு முழுமையான மார்பும் உடலின் உள்ளே சென்று எனது இதயத்திற்கு ஒன்றும் நுரையீரலுக்கு ஒன்றும் புதைவதைப்போல உணர்ந்தேன். மூளை பிளவுற்று யோனிவழியாக திறந்தது. "ஹிப்பி நானுன்னை நேசிக்கின்றேன். நீயே எனது ஆன்மாவின் சுதந்திரம்." காதின் அருகில் கிசுகிசுத்தாள், "உனது அன்பு பற்றியோ உனது வார்த்தைகள் பற்றியோ எனக்கு அக்கறையில்லை."

உப கதை 1

# வாழ்தல் என்பது கொண்டாட்டத்தின் மீதான விசாரணை

"அடுத்தகிழமை. ஹிப்பியை சுட்டுவிட்டார்கள். அன்று காலை நான்கு மணியளவில் வெள்ளைவாகனத்தில் வந்த அவர்களால் அவள் சுடப்பட்டிருந்தாள். சிவப்பு தகர கதவுகளை ஹார்ன் சத்தத்தில் மிகவும் அதிகாலை அவள் ஆர்வத்துடன் திறந்திருக்க வேண்டும். சரியாக நெற்றிப்பொட்டில் ஒன்று அடிவயிற்றில் ஒன்று. இரண்டு தோட்டாக்கள். வீட்டின் முன்னால் குவிக்கப்பட்டிருந்த சல்லிக்குவியலின் மேல் அவளது உடல் குறுகிபோய் கிடந்ததை எந்த ஆணாலும் பார்த்து சகிக்க முடியவில்லை. தொடைகளில் நேர்த்தியற்று சரிந்து கிடந்தது அவளின் பாவாடை. இறுகிபோயிருந்த வாயின் வழியாக அரைவாசி பற்கள் வெளியில் தெரிந்தன.

"இத்தனைக்கும் அவளுக்கு எத்தனை வயதென்று நினைக்கிறீர்கள், இருபது. பழுப்புநிற முகத்தில் கன்றிபோய் கறுப்பு திட்டுகளாக மாற்றம் பெற ஆரம்பித்திருந்தன. பாரிசவாதத்தால் பாதிக்கப்பட்டிருந்த அவளது தாய் கால்கள் முற்றாக செயலிழந்து ஆறு வருடங்களாக படுக்கையில் கிடந்தவள். கைகளால் உந்தி நிலத்தை தள்ளி தள்ளி மெல்ல மெல்ல நகர்ந்து அவளது உடலின் அருகில் வந்து விலகியிருந்த அவளது பாவாடை மற்றும் சட்டையை சரிசெய்து விட்டு அவளது காலடியில் தலை கவிழ்ந்தபடி இருந்தாள். ரத்தம் முழுமையான திரவமாகஇல்லாமல் புகைப்படிந்ததை போல, கறுத்த நிறம் கலந்த பாகுத்தன்மையுடன், ஒரு கட்டத்திற்கு மேல் வழிந்தோட முடியாமல் நின்றது. தனது பாவாடை தலைப்பினால் முகத்தில் சிதறியிருந்த குருதிவடிவை துடைத்து எடுத்தாள் தாய்.. மழை தூமித்து ஈரம் வடிந்திருந்த சல்லிக்குவியல். நாய் மலம் காய்ந்து கறுத்திருந்தது. வேலிகளின் கரையிலெல்லாம் நீல நிற காட்டுப்பூக்கள் பூத்திருந்தன. ஊரில் இருந்த ஆண்கள் எல்லோரும் ஒரு வெள்ளைத் துணியைக்கொண்டு ஹிப்பியின் உடலை போர்த்தினார்கள். இத்தனைக்கும் தாய் ஒரு குரூர மௌனத்துடன் இருந்தாள். மிகவும் கரியதாகவும் வெடித்துபோயும் இருந்த அவளது உதடுகள் துடித்துக்கொண்டே இருந்தன.

"மிகவும்வயதான,வெத்திலைகறைதாடிமயிர்களில் படிந்து முறுகி விட்டிருந்த கிழவர், அருகே வந்து துணியை கீழே இழுத்துவிட்டு, மிக நிதானமாக, அழுக்கடைந்த தனது உடலில் கச்சிதமாகபொருந்தாத வழுக்கி சரிந்த சேர்ட்டின் பொக்கற்றை தனது கைகளால் நெஞ்சில் அழுத்தி தடவியவாறே, எஞ்சியிருந்த ஒரே ஒரு புகையிலை சுருட்டை எடுத்து வாயில் வைத்தவாறு, "அந்தோனி நெருப்பெட்டிய தாடா; வேசைக்கு எத்தின தரம் சொல்லி இருப்பன். நாறிக் கிடக்கிறாள்." பற்றவைத்த சுருட்டை உறிஞ்சி ஒரு இழுவை இழுத்துவிட்டு வாய்க்குள் தேங்கிய எச்சிலை காறித் துப்பினார். 'அந்தோனி அந்த பாய கொண்டுவாடா.' ஓலைப்பாயொன்றை அந்தோனி எடுத்து வந்தான். பாயை உடலின் அடியில் வைக்க சைகை காட்டிவிட்டு, 'தள்ளி இருந்து தொலை நொண்டிச் சனியனே. வேசைய பாயில போடுடா, நீ இந்தா காலப்பிடி.' 'கிழட்டு நாயே அவளிண்ட உடம்ப தொடாத' என்று பெரிதாக வலுவானவரை கத்தினாள் தாய். சல்லிகளால் இயன்றவரை கிழவனின் மேல் வாரி இறைத்தாள். 'ஒரு சதம் குடுக்காம எத்தின தடவை அவளோட நீ படுத்திருப்பாய். பிண ஓழி. இப்ப என்னடா உத்தமன் மாதி கதைச்சிக்கொண்டு நிக்கிறாய். போடா. இதுல கிடந்து அவளிண்ட உடம்பு அழுகி நாறினாலும் பரவாயில்லை. உன்ன போல ஒரு தேவடியாள் மகண்ட கை இனியும் அவளிண்ட உடம்பில படக்கூடாது.' 'வேசபொத்தடி வாயை' என்று கிழவர் பதிலுக்கு கத்திவிட்டு உடலை உருட்டி பாயில் படுக்கவைத்து, கால் பகுதியில் கிழவரும் தலைப்பகுதியை அந்தோனியும் பிடித்தபடி வீட்டிற்குள் கொண்டு சென்றார்கள். ஹிப்பி வெட்டபட்ட அவளது முடிகள் மட்டும் அங்கொன்றும் இங்கொன்றுமாக அசைந்தன.

"ஹிப்பி இறப்பதற்கு மூன்று தினங்களுக்கு முன் நான் அவளுடன் இருந்தேன். கொஞ்சம் அவளை பற்றி அறிந்துகொள்ள அவளிடம் பேச்சை குடுத்தேன். 'நீ யாரையாவது காதலிக்கிறாயா.' 'இல்லை அதற்கான எந்தவளமும்எனக்குஎன்னை சார்ந்துஇருப்பதில்லை. ஆட்களை தேடி கண்டுபிடிக்க வேணும். அது எப்படி. ஒரு பிரமாதமும் இல்லை. மங்குகிற மாலை வேளையில் பேருந்து நிலையம் சென்று நூறு ரூபாவை எடுத்து முகத்தில் விசிறிக்கொண்டு இருக்கும்போது ஏற்கனவே இது பற்றி அறிந்த ஒருவன் கண்டுகொள்வான். ஒருஇரவு கடந்துவிடும். இரவுகள்



மட்டுமில்லை பகல்களும். உனக்கொன்று தெரியுமா, நான் மிரட்டப்பட்டேன். யாரோ சிலர். நான் கொலைசெய்யப்பட்டுவிடுவேனாம். நீ நினைக்கிறாயா நான் இறந்துவிடுவேன் என்று. நீ ஒரு எழுத்தாளனா என்னைப் பற்றி என்றாவது எழுதுவாயா? இல்லை நீ எழுதக்கூடாது. எனது வாழ்கையின் புனிதத்தை அது சிதைத்துவிடும். சிரிக்க போகின்றாயா. இவள் போன்ற ஒருத்திக்கு புனிதமென்ன என்று. நீ நிச்சயம் சிரிக்க வேண்டுமென்றே அதை சொன்னேன். ஒரு மனிதனாவது ஒரு விபச்சாரியை புனிதமுள்ளவளாக நினைப்பானா. ஆனால், புனிதமென்பது உடலின் கொண்டாட்டம். உடலின் புரிதல். உடலின் விடுதலை. மண்ணில் அமிழ்ந்திருக்கும் அமைதி தான் புனிதம். ஒரு உடல் மண்ணுக்கு சமானம். நீ உன்னைப்போன்ற ஒவ்வொருத்தனும் உலகிலேயே மிக அசுத்தம் வாய்ந்த பொருளை கொள்வனவு செய்வானா. ஆனால், பார் மீண்டும் மீண்டும் மனத்தால் அசுத்தம் என்று உணரப்பட்டாலும் நுகரப்படும் ஒரு உடல் புனிதமில்லையா? அசுத்தமென்று உணரப்பட்டாலும் அதை ஏற்றுக்கொள்ளும் மனம் புனிதமில்லையா.'

"நான் அந்த இடத்தில் அந்த கூட்டத்தில் ஒருவனாக நின்றேன். ஒரு அடி முன்னேற நான் விரும்பவில்லை. இறந்த உடல்கள் கதைகளை உருவாக்குகின்றன. அது ஒரு சாகச கதை. பெரும்பாலும் ஹிப்பிக்கு பிடிக்காத சமாச்சாரம் அது. ஆனால், நான் இதை நான் சொல்லியே ஆகவேண்டும். யாருக்காவது சொல்லியே ஆக வேண்டும். இதற்கு முன்னர் அதை நான் அவளுக்கு சொன்னேன்.

"உனக்கொன்று தெரியுமா லேலி. எனது அப்பா ஒரு கதையை சொன்னார்." அவளது பாதத்தை எனது தொடையில் எடுத்து வைத்து விரல்களை நீவினேன். "அதில் வந்த பெண் மிக அழகானவள். பதின்மத்தில் அவள் இருந்தாளாம். நீ நம்பாவிட்டாலும் இது உண்மை கதை. ஏனென்றால் அவளை அவர்கள் சுட்டார்கள். அவர்களால் தான் எங்களூரில் விபச்சாரம் குறைந்தது என்று இப்போதும் நம்பப்படுகின்றது."

"அவள் பேரென்ன?"

"புனிதா."

**ஆதி பார்த்திபன்** <aathiabi13@gmail.com>

# திரைப்படமாகும் இலக்கியம்

## முரசொலி மாறனை மறக்க முடியுமா?

### தினகரன் ஜெய்

இலக்கிய படைப்புகள், குறிப்பாக நாவல்கள் திரைப்படமாக எடுக்கப்படுவது தமிழ் சூழலில் தற்போது கவனம் பெற்று வருகிறது. பூமணியின் 'பிறகு' நாவலை வெற்றிமாறன் திரைப்படமாக எடுத்துள்ளார். கல்கியின் 'பொன்னியின் செல்வன்' நாவலை மணிரத்னம் திரைப்படமாக எடுத்துள்ளார். வெற்றிமாறனின் 'விசாரணை', தற்போது வெளியாகவுள்ள 'விடுதலை' இலக்கிய படைப்புகளை தழுவி எடுக்கப்பட்டவைதான். சி.சு. செல்லப்பாவின் 'வாடிவாசல்', இமையத்தின் 'செல்லாத பணம்' நாவல்களையும் வெற்றிமாறன் திரைப்படமாக எடுக்க உள்ளார். சு. வெங்கடேசனின் 'வேள்பாரி' நாவலை ஷங்கர் திரைப்படமாக எடுக்கிறார். தமிழ் திரைப்பட வரலாற்றில் இப்படி இலக்கிய படைப்புகளை தழுவி எடுக்கப்பட்ட திரைப்படங்களை நோக்கும்போது, முக்கிய பங்களிப்புகளை செய்துள்ளவர்களில் ஒருவராக கவனம் பெறுகிறார், முரசொலி மாறன்.

திராவிட இயக்கத்தைச் சேர்ந்த எழுத்தாளர்களும் கலைஞர்களும் சினிமா என்ற ஊடகத்தை ஆக்கிரமித்த அத்தியாயம் சுவாரசியமிக்கது. சினிமா என்ற ஊடகத்தின் மூலம் பிரச்சாரத்தை முன்னிறுத்தி சாமர்த்தியமாக வெற்றி கண்டவர்கள் திராவிட இயக்கச் சிந்தனையாளர்கள் மட்டும்தான். மேலும், திரைப்படத் துறையில் அவர்களின் பங்களிப்பு மதிக்கக் கூடியதும்கூட. புராணங்களும் பக்தி இலக்கியங்களும் படமாகி கொண்டிருந்த தமிழ் சினிமாவில் 50களின் தொடக்கத்தில் சமூக கதை படமாகிய தருணத்தை கவனப்படுத்தி திராவிட இயக்க எழுத்தாளர்கள் சினிமாவை திறனோடு பயன்படுத்தினர். அதிலும் குறிப்பாக அறிஞர் அண்ணாவும் கருணாநிதியும், தன் சொல் வன்மையால் ரசிகர்களை மயக்கினர்.



அமெரிக்கரான எல்லிஸ் ஆர். டங்கனும் லண்டனில் படித்த ஏ.எஸ்.ஏ. சாமியும் திரைப்படங்களை உருவாக்கிய தருணத்தில்தான் இந்த திராவிட இயக்க எழுத்தாளர்கள் சினிமாவில் நுழைந்தார்கள். ஏ.எஸ்.ஏ. சாமிக்கு உதவியாளராக 2 ஆண்டுகள் திரைத்துறையில் எழுதிக் கொண்டிருந்த கருணாநிதிக்கு 'பராசக்தி' திரைப்படம் ஓர் முழுமையான கவன ஈர்ப்பை கொடுத்தது. அதேபோல 'நல்லதம்பி' படத்தின் மூலம் திரைப்படத்துறைக்கு எழுத வந்த அண்ணாவும் மேலைநாட்டு நாவல் இலக்கியங்களின் பாதிப்பால் திரைப்படங்களில் எழுத ஆரம்பித்தார். மு.கருணாநிதியும் அண்ணாவும் பரந்துபட்ட வாசிப்பு அனுபவத்தை பெற்றிருந்தனர். காப்பியங்களை தழுவி படைப்பை உருவாக்கினாலும் இவர்கள் இருவரும் கொள்கை கோட்பாட்டை பிரதிபலிக்கிற வசனங்களை எழுத தவறுவதே இல்லை. இந்த பண்பு தான் எளிய மக்களிடம் இவர்களை கொண்டு சேர்த்தது.



தமிழ் சினிமாவில் மணிக்கொடி எழுத்தாளர்களான இளங்கோவனும் பி.எஸ். ராமையாவும் வசனகர்த்தாவாக மிகப்பெரிய வரவேற்பை பெற்றதற்குப் பிறகு அண்ணா, கருணாநிதி இருவர் மட்டுமே வசனத்திற்காகவே கவனிக்கப்பட்ட படைப்பாளியாக இருந்தனர். மேற்குலக ஆங்கில இலக்கியங்களை தழுவி தமிழுக்கு தகுந்தாற் போல எழுதுவதில் அண்ணாவும், காப்பியங்களை சமகால சமூக சூழலுக்கு ஏற்ப திரைப்படங்களாக உருவாக்குவதில் கருணாநிதியும் தேர்ந்த படைப்பாளியாக இருந்தனர். இதனாலேயே சினிமாவில் வசன ஆதிக்கம் மேலோங்கி இருந்ததற்கு இவர்களே காரணம். ஹாலிவுட் படங்களின் தாக்கத்தினால் அண்ணாதுரை சில திரைக்கதைகளை உருவாக்கினார்.

50க்குப் பிறகு சினிமாவில் திராவிட இயக்கச் சிந்தனையாளர்களின் வருகை அதிகமானது. நீண்ட அடுக்கு மொழியில் எதுகை மோனையோடு வசனம் பேசுவது தான் சினிமாவின் நடிப்பு என்று நம்பப்பட்டது. வசனமே சினிமாவின் பிரதான அம்சமாக பார்க்கப்பட்டது. (அதேநேரம், மேடை நாடக பாணியிலேயே காட்சி ஊடகமான சினிமா தேங்கியும் நின்றதற்கும் திராவிட இயக்க எழுத்தாளர்களே காரணமும் ஆனார்கள். திரைப்பட மொழி என்பதில் எள்ளளவும் கவனமற்றே தமிழ் சினிமா இருந்தது.)

புராண, பக்தி இலக்கியங்களில் கவனம் செலுத்தி கொண்டிருந்த திரையுலகு இவர்களால் திசை திரும்பி சமூகக் கதைகளில் ஆர்வம் செலுத்தத் தொடங்கிய சூழலில் நாவல்களை படமாக்கும் முயற்சியும் நடந்தேற தொடங்கியது. பிற மொழி இலக்கியங்களை திரைப்படமாக உருவாக்கும் முயற்சியும் நடந்தது. அவ்வாறு வங்க மொழி நாவலாசிரியர் பிரபாவதி தேவி சரஸ்வதி எழுதிய 'Bijila' என்ற நாவலைத் தழுவி 'குல தெய்வம்' என்ற திரைப்படத்தை கிருஷ்ணன் பஞ்சு உருவாக்கினர். அப்படத்திற்கு திரைக்கதை - வசனம் எழுதி 1954ல் திரைப்படத் துறையில் அறிமுகமானார் திராவிட இயக்க சிந்தனையாளரும் பத்திரிகையாளருமான முரசொலி மாறன். இவரிடத்தில் மிகச் சிறப்பான மொழி ஆளுமை இருந்தது. தேவையற்ற அடுக்குமொழி வசனங்களை இவர் தவிர்த்தார். கதாபாத்திரத்தின் உளவியலை குதர்க்கமாக வெளிப்படுத்தாத தன்மையில் இவரது வசனம் இருந்தது. இது தான் இவரது சிறப்பு இயல்பு. புகழ்பெற்ற எழுத்தாளர்களின் படைப்புகளை திரைக்கதையாக உருவாக்குவதிலும் முரசொலி மாறன் ஆர்வமாக செயல்பட்டார்.

உத்திர பிரதேசத்தை சேர்ந்த திரைப்பட ஆளுமையான கவிஞர் சுக்ராம் சர்மா எழுதிய கதையை ஒளிப்பதிவாளர் சுப்பாராவ் 'மனமுள்ள மறுதாரம்' என்ற பெயரில் திரைப்படமாக உருவாக்கினார். அந்தப் படத்திற்கு திரைக்கதை - வசனம் எழுதினார் முரசொலி மாறன். பிரபல கன்னட எழுத்தாளர் கிருஷ்ணமூர்த்தி புரானிக்



மரகதம்

எழுதிய கதையை 'சகோதரி' என்ற பெயரில் பீம்சிங் படமாக்கியபோது திரைக்கதை-வசனம் எழுதியவரும் முரசொலி மாறன் தான். இந்திய மொழிகளில் உருவான நாவல் இலக்கியங்கள் மட்டுமல்லாது திராவிட மொழி பேசுகிற எழுத்தாளர்களின் படைப்புகளை திரைப்படமாக உருவாக்கியபோதும் ஒரு திரைக்கதை ஆசிரியராக முரசொலி மாறனின் பங்களிப்பு மதிப்புக்குரியதாகும். தமிழ் திரைப்பட உலகின் புதுமை விரும்பி என்றழைக்கப்படும் டி.ஆர். சுந்தரத்தின் இயக்கத்தில் முரசொலி மாறன் திரைக்கதை - வசனம் எழுதிய 'தலை கொடுத்தான் தம்பி' மிக முக்கியமான படமாகும். டி.எஸ். துரை எழுதிய 'கருங்குயில் குன்றத்துக் கொலை' என்ற நாவலை 'மரகதம்' என்ற பெயரில் படமாக்கிய போது முரசொலி மாறனே வசனம் எழுதினார். 'மரகதம்' முரசொலி மாறன் வசனத்தில் மிக முக்கியமானத் திரைப்படமாக கவனிக்கப்பட்டது.

திராவிட கழகத்திலிருந்து பிரிந்து திராவிட முன்னேற்றக் கழகம் என்ற அரசியல் இயக்கம் ஆரம்பிக்கப்பட்டவுடன் திராவிட இயக்கச் சிந்தனையாளர்களின் கவனம் அரசியல் களத்தில் முழுமையாக குவிய தொடங்கியது. மு.கருணாநிதியை தவிர்த்து திரைப்படத் துறையிலும் அரசியலிலும் ஒரே நேரத்தில் தொடர்ச்சியாக இயங்க கூடியவர்கள் என்று வேறு எவருமில்லை. அந்த வகையில் 1965க்குப் பிறகு திராவிட இயக்கக் கலைஞர்களின் சினிமா பங்களிப்பு குறிப்பிடப்படுமளவுக்கு இல்லை.

'மரகதம்' திரைப்படத்திற்குப் பிறகு தமிழக அரசியல் மாற்றத்திற்குப் பிறகு முரசொலி மாறன் கிட்டத்தட்ட ஐந்து ஆண்டுகள் கழித்து 'மறக்க முடியுமா' என்ற பெயரில் திரைப்படத்தை இயக்கினார். இப்படத்திற்கு திரைக்கதை - வசனம் எழுதியவர் மு. கருணாநிதி. அதனைத் தொடர்ந்து 'பிள்ளையோ பிள்ளை' என்று ஒரு திரைப்படத்தை தயாரித்ததோடு முரசொலி மாறன் சினிமா விட்டு விலகி அரசியலில் மட்டுமே கவனத்தை செலுதத் தொடங்கினார்.

தமிழ் சினிமாவில் வசனத்தை கொண்டாடிய காலகட்டத்தில் முரசொலி மாறனின் பங்கும் இன்றியமையாததாகவே இருக்கிறது. மேடை நாடகங்களில் திராவிட இயக்கப் பிரச்சாரத்தை முன்னெடுத்து தன் அரசியல் இயக்கத்தை கட்டமைக்க எந்த அளவுக்கு முயற்சித்தார்களோ அதே அளவுக்கு சினிமாவையும் பயன்படுத்தினர். அதனடிப்படையில் ஏ.கே. வேலன், அண்ணாத்துரை, மு. கருணாநிதி, முரசொலி மாறன் போன்றவர்கள் சினிமாவில் வெற்றியடைந்த ஆளுமைகளாகவே இருக்கிறார்கள்.

**தினகரன் ஜெய்** <dinakaranjai20@gmail.com>

# குன்றத்தூர் சங்கதி

**விட்டல்ராவ்**

அன்றைய நாள் 'ஸ்ட்ரோவ் ஜர்' வகை தொலைப்பேசி தொடர்பகங்கள் ஒவ்வொன்றின் எல்லையும் வெகு தூரத்துக்கும் விரிவடைந்திருக்கும். மைலாப்பூர் தொலைப்பேசி இணைப்பகத்தின் கீழ்தான் முதலில் அடையாறு, திருவான்மியூர், நீலங்கரை வரையுள்ள பகுதிகளின் சகல தொலைத்தொடர்புகளும் இருந்து வந்தன. பிறகுதான் அடையாறு தொலைப்பேசி இணைப்பகம் ஏற்பட்டு,மைலாப்பூர் பிரிக்கப்பட்டது.இதைப்போல செயிண்ட் தாமஸ் மவுண்ட் இணைப்பகத்தின் கீழ்தான் போரூர்,குன்றத்தூர் பகுதிகளின் தொலைப்பேசிகளும் இருந்து வந்தன. மைலாப்பூரிலிருந்து திருவான்மியூரும் பரங்கிமலையிலிருந்து குன்றத்தூரும் வெகுதூரத்திலுள்ள இடங்கள். எனவே, இம்மாதிரி வெகு தூரத்திலுள்ள இடங்களிலுள்ள வாடிக்கையாளர்களின் தொலைப்பேசிகள், பொதுத் தொலைப்பேசிகள் சாதாரணமாய் இயங்கும் தொலைப்பேசிகள் போல அல்லாது வெகு தூரத்திலிருப்பதால் 'ரிலே செட்' (RELAY SET) என்ற வகையான தொடர்பிணைப்பு முறையால் இணைக்கப்பட்டு இயங்கி வந்தன.



இந்த 'ரிலே செட்' எனும் சுவிட்சுகள் பூக்கடை பகுதியில் (சைனா பஜார்) அமைந்துள்ள டெலிஃபோன் ஹவுசிலுள்ள மத்திய தொலைப்பேசி இணைபகத்தில் (GENERAL EXCHANGE) இடம்பெற்றிருந்தன. ஒரு தொலைப்பேசித் தொடர்பகத்தின் கட்டுப்பாட்டுக்குள் இயங்கும் வெகு தொலைவிலுள்ள தொலைப்பேசிகள் ஒவ்வொன்றுக்குமான 'ரிலே செட்' கருவி மத்திய தொலை தொடர்பகத்தில் அமைக்கப்பட்டு ஒவ்வொன்றுக்கும் ஒரு எண் தரப்பட்டிருக்கும். இந்த 'ரிலே செட்' வழியாகத்தான் அதனுடன் இணைக்கப்பட்ட தொலைப்பேசி இயங்கி வரும். 'ரிலே செட்'டிலிருந்து கேபிள் பூமிக்குள் புதைக்கப்பட்டு அதன் தொலைப்பேசியின் கட்டுப்பாட்டை வகிக்கும் தொடர்பகத்தின் வழியாக வெகு தொலைவிலிருக்கும் வாடிக்கையாளருக்குச் செல்லும். அப்படியான தொலைப்பேசி பழுதடைந்து புகார் தரப்பட்டால், கட்டுப்பாட்டு எக்ஸ்சேஞ்சிலிருந்து நேரிடையாக பழுதடைந்த தொலைப்பேசியை சோதித்துப் பார்க்க முடியாது. மாமூலான முறையில் மற்ற தொலைப்பேசிகளை சோதிப்பது மாதிரி சோதித்தால் எவ்வித பழுதுமின்றி சரியாவே இருப்பதால் 'டெஸ்ட் ரிசல்ட்' கிடைக்கும். ஆனால், அது உண்மையான முடிவல்ல. அப்படியான பழுதுகளை சோதித்தறிய பூமிக்கு அடியில் புதைக்கப்பட்ட கேபிள் வழியாக அந்தத் தொலைப்பேசிக்கான 'ரிலே செட்'டிலிருந்து தான் பரிசோதனை மேற்கொள்ளவேண்டும். அப்போதுதான் இன்ன பழுது, இங்கிருக்கிறது என்பது துல்லியமாய்த் தெரியவரும்.

இதயம் சம்மந்தமான சோதனைகள் வழியாக துல்லியமாய்த் தீர்மானிக்க முடியாத இதய நோயை,'ஆஞ்ஜியோகிராம்' பரிசோதனை எனும் இரத்த நாளங்கள்

வழியே சென்று இதயப் பரிசோதனை செய்வது போலத்தான், கேபிள் வழியே சென்று ரிலே செட்டிலிருந்து தொலைப்பேசியி பழுதுகளைக் கண்டறியும் முயற்சியென்று சொல்லலாம். எல்லாம் சரியாக இருந்து, 'ரிலே செட்' பழுதடைந்திருந்தால் அதையே மாற்ற வேண்டியிருக்கும்.

அன்றைக்கு, குன்றத்தூரில் குடியிருக்கும் முருகனைத் தவிர சொல்லும்படியாக வேறெதுவுமில்லை. சிலர் கபிலரைத் தொடர்புபடுத்துவார்கள். ஊரில் அப்போது தொலைப்பேசிகள் ஐந்தாறுதான் இருந்தன. அதில் இரண்டு கல்லுடைத்து ஜல்லியாக்கும் 'குவாரி' நிறுவனங்களுக்கானது. மற்றொன்று அவ்வூர் காவல்நிலையத்தின் தொலைப்பேசி. இந்த சொற்ப எண்ணிக்கையிலுள்ள தொலைப்பேசிகள், பூக்கடை மத்திய தொலைத் தொடர்பகத்தில் இவற்றுக்கான 'ரிலே செட்' வழியாக இயங்கிவந்தன. ஒவ்வொரு முறை பழுது ஏற்பட்டு புகார் வரும் போதும், அடியைப் புடிடா பாரதப்பட்டா என்ற கணக்கில் கேபிளை வெட்டி பரிசோதனை மேற்கொண்டு, பூக்கடை எக்ஸ்சேஞ்சு டெக்னிஷியனை அழைத்து பழுதடைந்த தொலைப்பேசியின் 'ரிலே செட்' எண்ணைக் கொடுத்து சோதித்து வரவேண்டும்.

'சுத்த பேஜாரு புடிச்ச வேலை' என்று சலித்துக்கொள்ளும் வேலை அது. பத்து நாள் ஆனாலும் பழுது சரிபார்க்கப்படாது செத்தே கிடக்கும் குன்றத்தூர் தொலைப்பேசி. இந்த ரீதியில் குன்றத்தூர் போலீஸ் நிலையத்தின் தொலைப்பேசி அடிக்கடி செத்துப் போய்விடும். ஊரிலுள்ளவர்கள் தங்களுக்கொரு பொதுத் தொலைப்பேசி அமைத்துக் கொடுக்க வேண்டுமென்று நீண்ட காலமாக விண்ணப்பித்தும் அது கவனிக்கப்படாமலே இருந்து வந்தது; குன்றத்தூருக்கும் போரூர் முகலிவாக்கம் பகுதிகளுக்கும் மூன்று லைன்மேன்கள் இருந்தார்கள். அதில் ஒருவர் நிரந்தரமாக குன்றத்தூர் பகுதியைப் பார்த்து வந்தார். அவர் 'சாரங்கி' என்று அன்போடு வாடிக்கையாளரால் அழைக்கப்பட்ட சாரங்கபாணி.

குவாரி உரிமையாளர்களின் தொலைப்பேசி பழுதடைந்தால்சாரங்கப்பாணி பறப்பார். அவர்களும் இவரை நன்றாகக் கவனித்துக் கொள்ளுவார்கள். குன்றத்தூரில் தொலைப்பேசி பழுதடைந்து புகார் வந்தால் லைன்மேனுக்கு பஸ் போக்குவரத்துக்கான செலவுக்குபணம்கிடைக்கும். அதைவாங்கிக்கொண்ட சாரங்கு தன் சைக்கிளைத்தான் மிதித்துச் செல்லுவார். பஸ்சார்ஜூக்களிபட்ட பணத்தை மலையடிவாரத்தில் செலவழித்து விடுவார். குன்றத்தூரில் தொலைப்பேசி பழுது இருந்தால் போதும் அவருக்கு 'தண்ணிதாகம்' எடுத்துவிடும். பஸ்டிக்கட்டுகளை அவர் அதிகாரியிடம் தந்து பணம் பெற்றதற்கான சிறுபடிவத்தில் ஒட்டி, கையெழுத்திட வேண்டும். சாரங்கபாணி குன்றத்தூர் பஸ் நிலையத்தில், கிண்டியிலிருந்து பரங்கிமலை வழியாக வந்து போகும் பஸ் பயணிகளை நோட்டம் விடுவார். இறங்கும்போது கீழே கசக்கி எறியும் டிக்கட்டுகள் மீது கவனம் வைப்பார். அதே மாதிரி கிண்டியில் குன்றத்தூரிலிருந்து இறங்கும் பயணிகளின் மேல் கவனம் செலுத்துவார்.

"ஏம்பா, இப்படி கசக்கி கொண்டு வந்து ஒட்டறே?" என்று அதிகாரி கேட்கும்போது சாரங்கபாணி சிரிப்பார். குன்றத்தூர் காவல் நிலையத்தின் தொலைப்பேசி பழுதடைந்தால், ஒரு போலீசுகாரர் புகார் அளிக்க சைக்கிளில் மார்வாடி கடைக்குச் சென்று அங்குள்ள தொலைப்பேசி மூலம் புகார் அளிப்பார். இருபது நிமிடம், 'ரிலே செட்' சேர அரை நாள், பழுதை சீராக்க ஒரு நாளோ இருநாளோ என காவல் நிலைய தொலைப்பேசிக்கு சகல சிகிச்சையும் நடந்து உயிர் பெற்றெழ ஒரு வாரமாகி விடும், அதுவே 'கேபிள் ஃபாஸ்ட்' என்று ஆகிவிட்டால், பத்து நாளோ அதற்கும் மேலேயோ.

இந்த சூழிலையில் மத்திய அரசின் இருபது அம்சதிட்டம் அமுலாக்கப்பட்டதையடுத்து ஊருக்கு விடிவு காலம் வந்ததாக பாமர எதிர்பார்ப்பு ஏற்பட்டது. பின் தங்கிய கிராமங்களை வங்கிகள் தத்தெடுத்துக்கொண்டு வளர்ச்சிப் பணிகளை மேற்கொள்ளவேண்டுமென்பதுஇருபது அம்சங்களில் ஒரு அம்சம். குன்றத்தூரும் அன்று மிகவும் பின் தங்கிய கிராமமாகத்தீர்மானிக்கப்பட்டுஇருபது அம்ச திட்டத்தின் சில அம்சங்களின் செயல்பாட்டுக்குத் தேர்வு செய்யப்பட்டது. அதன்படி பொதுமக்களின் அவசர தொலைத்தொடர்பு வசதிக்காக, ஒரு பொதுத் தொலைப்பேசிக் கூண்டு நிறுவப்பட ஆணை பிறப்பிக்கப்பட்டது. கிராமத்தின் வளர்ச்சிப் பராமரிப்பு என்று ஊர் கோடியிலிருந்த மிகவும் நலிந்த பின் தங்கிய மக்களை தேர்வு செய்துகொண்டது. அதன்படிபொதுமக்களின் அத்யாவசிய வாழ்க்கைச் செலவினங்களையும் கருத்தில் கொண்டது.

கிராம வளர்ச்சி - பராமரிப்பு என்று ஊரை தத்தெடுத்துக்கொள்ளும் அம்சம் இருபதம்ச திட்டத்தின் முக்கியமானதொன்று. பின் தங்கின வளர்ச்சி பெறாத ஊரை தத்தெடுத்து வளர்ச்சிப் பாதையில் பராமரிக்கும் பொறுப்பு அங்குள்ள பொதுத்துறை வங்கிக்கு அளிக்கப்பட்டது. வங்கி ஒவ்வொரு குடும்பத்துக்கும் இருபது அம்சதிட்டத்தை விளக்கி பணம் கடன் வழங்கியது. அந்தக் கடன் தொகையை அவர்கள் உபயோகமாய் தொழில் ஏதாவதொன்றில் செலுத்தி தாங்களும் வளர்ந்து ஊரையும் வளர்ச்சியில் கொண்டு செல்லவேண்டும். கடன் தொகையில் பன்றிகள் வாங்கி வளர்க்கலாம். நிறைய ஈன்றெடுக்கும். பிரத்தியேகமாய் தீனிச்செலவு செய்யவேண்டியிருக்காது. அதை அதுவே பார்த்துக்கொள்ளும். கடனும் தீரும், வாழ்க்கையும் உயரும். கோழிகள் வாங்கி வளர்க்கலாம். பன்றிவளர்ப்பு அசிங்கமென்று நினைத்தால் கோழி வளர்க்கலாம்.

வங்கியில் கடன் பெற்றவர்கள் மூன்று மாத




காலத்துக்குப்பின் தவணை முறையில் வாங்கிய கடனை வட்டியோடு சேர்த்து வங்கிக்குத் திருப்பித் தரவேண்டும். ஆனால், பன்றி வளர்க்க பன்றி வாங்கியவர்கள் அவற்றை வளர்ப்பதில் ஆர்வம் காட்டாது, விரைவில் வந்த விலைக்கு விற்று பணமாக்கினர். ஊரில் கள்ளச் சாராயம் காய்ச்சும் தொழில் கொடி கட்டிப் பறந்த காலம், பன்றி விற்று சாராயம் குடித்து மிச்சம் மீதமுள்ள பன்றிகளையும் கறி சமைத்து சாராயத்துக்குத் தொட்டுக்கொள்ள அரிய 'சைடு டிஷ்' ஆக்கினர். கோழி வாங்கியவர்கள் கதையும் இதே வழிதான், மூன்று மாத காலம் என்பது இப்படியாக தினோம் ஜல்சாவில் கழிந்து போயிற்று. வங்கிப் பக்கம் தலைவைத்தும் படுக்கவில்லை.

வங்கியிலிருந்து சிறு அதிகாரிகளும் கீழ்பட்ட சிப்பந்திகளும் ஸ்தலத்துக்கு விரைந்து சென்றனர். பயனில்லை கோர்ட் நடவடிக்கை அப்படியிப்படி என்று பயங்காட்டியும் பயனில்லை. இதற்குள் இருபது அம்சத் திட்டமும் இலேசாக மவுசு குறைந்து மங்கத் தொடங்கிற்று. அரசாங்கம் வாராக்கடனாக முடிவு செய்துகைகழுவும்படி யோசனை கொடுத்துவிட்டது.

சாராயம் காய்ச்சும் தொழில் எப்போதும் நடந்து வந்தது. இந்த சமயத்தில் அந்த ஊருக்கு பொதுத் தொலைப்பேசியும் (பப்ளிக் கால் ஆபீஸ் - P.C.O) அளிக்குமாறு உத்தரவு வந்துவிட்டது. புனித தோமய்யர் குன்று தொலைப்பேசி இணைப்பகத்தின் கட்டுப்பாட்டுக்குள் வரும் குன்றத்தூர் பகுதிக்கான பொதுத் தொலைப்பேசி வசதி ஏற்படுத்தும் பணி முசுவாயிருந்தது. தூரத்தை உத்தேசித்து 'ரிலே செட்' வாயிலாக கேபிள் வழியே வசதியேற்படுத்தும் வேலை நடந்தது. நாங்கள் ஒருபுறம் கேபிள் வழியே பூக்கடை எக்ஸ்சேஞ்சோடு பரிசோதனை செய்து அந்த கேபிள் தடமும் பிறகு 'ரிலே செட்' இயந்திரம் வரை சரியாக இருப்பதை உறுதிப்படுத்திக் கொண்டபின், பரங்கிமலை எக்ஸ்சேஞ்சிலிருந்து குன்றத்தூர் பொதுத் தொலைப்பேசி அமையும் இடம் வரை கேபிள் தடத்தைப் பரிசோதனை செய்து இணைப்பும் கொடுத்துவிட்டோம்.

ஒரு வாரம் தான் தாங்கியிருக்கும். குன்றத்தூர் காவல் நிலையத்திலிருந்து ரைட்டர் பேசினார்.

"சார், குன்றத்தூர் போலீஸ் டேஷனிலிருந்து

பேசறோம். புதுசா போட்ட பி.சி.ஓ. வேலை செய்யவில்லே. வந்து பார்த்து சரி பண்ணுங்க. பப்ளிக் இங்க வந்து கம்ப்ளெயிண்ட் பண்றாங்க. ஒரே பேஜாரு."

உடனே பூக்கடை எக்ஸ்சேஞ்சை அழைத்து அடியைப் புடிடா பாரதப் பட்டாவென்று ரிலே செட்டிலிருந்து பரிசோதிக்கும் கதையைத் தொடங்கினோம். இரண்டு முறை அழைத்தபோதும் பூக்கடை டெக்னீசியனும் அவரது உதவியான வயர்மேனும் ஒருவர் மாற்றி ஒருவராக தேனீர் குடிக்கப் போயிருந்தார்கள். அந்தப் பக்கத்தில் இருவரும் திரும்பி வந்து எங்கள் பக்கம் அழைத்தபோது என் உதவியாளர் வயர்மேன் தேநீருக்குப் போயிருந்தார். ஒரு வழியாக முழு வழித்தடத்தையும் பரிசோதித்ததில் எவ்வித பழுது இல்லாததால் சாரங்கபாணியை அனுப்பி பொதுத் தொலைப்பேசியில் இருந்து டயல் செய்து பேச அனுப்பினோம். குன்றத்தூருக்கு பஸ்ஸில் போய்விட்டு வருவதற்கான பஸ் செலவையும் அதிகாரி அளித்துவிட்டார்.

காவல் நிலையத்திலுள்ள தொலைப்பேசியை அங்குள்ள காவலர்கள் செல்லமாய்ப் பார்த்துக்கொள்ளுவார்கள். ஒவ்வொரு அழைப்பு வரும்போதும் ஒரே நபர் எடுத்துப் பேசுவதென்பது ஆகிற வேலையில்லை. வெவ்வேறு காவலர்கள் போய் எடுத்துப்பேசி வைப்பார்கள். ஒவ்வொரு அழைப்பை பேசி முடித்தவுடனும் பேசும் கருவியின் (ரிசீவர் - மௌத் பீஸ்) வாய்ப்பகுதியை நன்றாகத் துடைத்து வைக்கவேண்டும். காலை மாலை இரு வேளைகளிலும் வாய்ப்பகுதியை டெட்டாலில் நனைத்த பஞ்சால் துடைக்கவேண்டும், என்றெல்லாம் அந்த காவல் நிலையத்தில் தொலைப்பேசியை எடுத்துப் பேசுபவர்களுக்கு உத்தரவுகள். அவற்றைத் தவறாது கடை பிடித்தனர்.

காவல் நிலையத்துக்கு தொலைப்பேசி இன்றியமையாத மிக முக்கிய சாதனம். அந்த சிறு கருவி இயங்காமற் போய்விட்டால் அந்த காவல் நிலைய இயந்திரமும் ஸ்தம்பித்து நின்றுவிடும். எனவே, தொலைப்பேசி லைன்மேன் சாரங்கபாணிக்கு நிறைய மரியாதையும் சின்னச் சின்ன சலுகைகளும் அனுமதிக்கப்பட்டிருந்தன. காவல் துறையின் கெடுபிடிகளை சாரங்கபாணியிடம் பிரயோக்கமாட்டார்கள்.

இந்த சமயம் ஒரு பருவ மழையின்போது குன்றத்தூர் காவல் நிலையத்தின் தொலைப்பேசி செயலிழந்து போய்க் கிடந்தது. அங்கிருந்து கல்லுடைக்கும் குவாரி வரை சைக்கிளில் சென்று ஒரு காவலர் புகார் கொடுத்தார். காவல் நிலையத்து தொலைப்பேசிப் பழுது என்றால் சாரங்கபாணிக்கு அகமும் முகமும் கோணிக்கும். பழுதை சரி செய்துவிட்டு அங்கேயே நின்று மண்டையைச் சொரிந்து கொண்டிருக்க முடியாது. அதிகம் போனால் ஒரு கோப்பை தேநீர் வரவழைத்துத் தருவார்கள்.

"போல்டேசன் கேஸா, வை சார், நாளைக்கு போய் பாக்கறேன்" என்று சொல்லிவிட்டு கூடவே, "பத்து காசு தேறாது", என்று மூணுமுணுத்துக்கொள்ளுவார்.

குன்றத்தூருக்குப் போய் பழுது பார்த்துவிட்டு வருவதில் குவாரிகளின் தொலைப்பேசியென்றால் லைன் மேனுக்கு தெம்பாக இருக்கும். குவாரிகாரர்கள் பாவம் பரங்கிமலையிலிருந்து சைக்கிள் மிதித்துக் கொண்டு வருகிறானே என்று கை நிறைய தருவார்கள். சாரங்கி மலையடிவாரத்தில் தாகம் தணித்துக்கொண்டது போக வீட்டுக்கும் லாலா கடையிலிருந்து பொட்டலம் வாங்கிக்கொண்டு போவார்.

சாராயம் காய்ச்சும் மலையடிவாரத்து பதுங்குமிடங்களில் காவல் துறையினர் தேடுதலும் வேட்டையும் அவ்வப்போது நடக்கும். பெரிய பெரிய தகர டின்களிலும் பிளாஸ்டிக் கேன்களில்லும் நிரப்பிவைத்து வாடிக்கையாளருக்கு வினியோகிக்க வைக்கப்பட்டிருந்தவை பறிமுதல் செய்யப்பட்டு, வண்டியில் ஏற்றப்பட்டு, காவல் நிலையத்தில் வைக்கப்பட்டிருக்கும். அவை பிற்பாடு கொட்டியழிக்கப்பட்டிருக்கும், அதை ஏக்கத்தோடு பார்த்த சமயங்களுண்டு. சில சமயம் அவற்றைத் தீக்குச்சி கிழித்துப்போட்டு பற்றவைத்து எரித்ததையும் பார்த்திருக்கிறார். சாராயம் கழிவு நீர் கால்வாயில் கொட்டப்பட்டு எடுக்கப்படுவதை வழி நெரிய வாயெரிய பார்த்துக்கொண்டே சாரங்கபாணி நின்றதுண்டு.

"பொதுத் தொலைப்பேசி பழுதடைந்திருக்கிறது உடனடியாக வந்து கவனிக்கவும்", என்ற காவல் நிலையத்திலிருந்து புகார் வந்த சமயம் பார்த்து கனமழை பிடித்துக்கொண்டது. நொண்டிக் குதிரைக்கு சறிக்கினது சாக்காயிற்று. மழை கொட்டிக் கொண்டிருந்தது. தன்னால் மழையில் போய்வர முடியாதென்று திடமாக மறுத்துவிட்டார் சாரங்கபாணி.

சோதித்துப் பார்த்ததில் 'ரிலே செட்' இருக்கும் திசையிலும் பழுது இருப்பதாய்க் காட்டியது. எனவே, அதில் கவனம் செலுத்திய பரிசோதனைப் பகுதி டெக்னிஷியன் குன்றத்தூருக்கு சாரங்கபாணியை மறுநாள் போய்க் கொள்ளும்படி கூறிவிட்டார். ரிலே செட்டை மாற்றிப் பார்த்தும் குன்றத்தூர் திசையில் பழுதிருப்பதாய்க் காட்டவே மறுநாள் சாரங்கபாணி புறப்பட்டுப் போனார். பழுதைச் சரியாக்கிவிட்டு காவல் நிலையத்தையடைந்தார். பொதுத் தொலைப்பேசியின் பழுதைச் சரியாக்கும் சேவைக்கு எந்த திக்கிலும் தனக்கு பாராட்டு கிடைக்காது என்பதும், அதற்கு காவல் நிலையத் தொலைப்பேசியின் பழுதை கவனிக்கும் சேவையே தேவலை என்றும் அவருக்குப் படும்.

அங்காவது ரைட்டர் ஒரு தேநீருக்காவது சொல்லியறுப்புவார். பொதுத் தொலைப்பேசி பழுதடைந்தால் பலர் போய் காவல் நிலையத்தில் முறையிட்டு அங்குள்ள தொலைப்பேசியிலிருந்து புகார்தர வேண்டுவார்களே தவிர, மழை காற்று வெயிலென்று பாராது பரங்கிமலையிலிருந்து சைக்கிள் மிதித்துக்கொண்டு வந்து பழுதைச் சரி செய்யும் லைன் மேனுக்கு ஐயோ பாவமென்று ஒன்றுமே செய்ய மாட்டார்கள். கேட்டால், “நீ உன்னோட டூட்டியதானே செய்யறே, அதுக்குத்தானே சம்பளம் வாங்கறே”, என்பார்கள்.

”என்ன சாரங்கு சார்?” என்றார் காவலர் ஒருவர்

”போணியே ஆவுல, கண்ணை முளிச்சதுமே இந்தூரு பி.சி.ஓ. கம்ப்ளெயிண்ட். இன்னைக்கு ஆனாப்பலதான்,” என்றார் சாரங்கபாணீ. வெறுங்கையோடு வெளியேறத் தொடங்கிய அவர் காம்பவுண்டு சுவரோரமாய் பார்வையைச் செலுத்தினார். வரிசையாக பிளாஸ்டிக் கேன்களும் டால்டா டின்களும் நின்றிருந்தன. அவை இரண்டு நாட்களுக்கு முன்னால் நடந்த வேட்டையில் பிடிபட்டவை. நெருங்கிப் பார்த்ததில், எல்லா கேன்களும் தளும்பத் தளும்பஞ் சாரங்கபாணிக்கு ஊறிற்று. அனேக காவல் நிலையங்களில், இலாகா ஊழியர் பட்டியலில் இல்லாத ஓர் அந்நிய மனிதன் எடுபிடி வேலைகளுக்கென வந்து வந்து போவார். அனேகமாய் காவல் துறை காவலர்களுக்கு வழுங்கின அரைக்கால் அல்லது முழுக்கால் சட்டையைக் கேட்டு வாங்கி அணிந்திருப்பார். இந்த அரை குறை காவல்துறை அடையாளமே அவருக்குப் போதுவெளியில் குறைந்த பட்ச மரியாதையும் பயமும் அவர் பேரில் இருக்கும். அவர் சகல விதத்திலும் ஒரு கூரியர் பையனாக அவதாரமெடுத்திருப்பார். காவல் நிலையத்தின் சிப்பந்திகளுக்கு அவர்கள் சொல்லும் போதெல்லாம் போய் தேநீர் வாங்கி வரவேண்டும். அவர்களில் சிலர் வீட்டிலிருந்து உணவு எடுத்து வந்து மதியம் சாப்பிடுவார்கள். மேஜையைச் சுத்தம் செய்வதோடு சாப்பிட்ட பாத்திரங்களையும் கழுவி வைக்கவேண்டும். தபால் அலுவலகத்துக்கு பீடி சிகிரெட் வாங்கிவர போய் வரவேண்டும்.

ஒரு பழைய சைக்கிள் காவல் நிலையத்தில் நிற்கும். அதை இந்த கூரியர் பையன் தான் பயன்படுத்துவார், புகார் அளித்தவர்களும் கைது செய்து உள்ளே வைக்கப்பட்டவர்களின் உறவினர்களும் இந்த கூரியர் பையனை தெய்வமாய் வணங்கி போற்றி அவரது ஒவ்வொரு கண்ணசைவையும் வாயசைவையும் அதிகவனத்தோடு கவனிப்பார்கள். அவர் கூறும் யோசனைகள் தெய்வவாக்கு.

சாரங்கபாணி இப்போது அந்த கூரியரை ஒரு மாதிரி பார்த்தார். கூரியரின் கூர்மையான புத்திக்கு சாரங்கனின் பார்வை புரிந்திருக்கவேண்டும்.

“வேணும்னா ஒண்ணு எடுத்துக்க அண்ணே. நாளைக்கி வந்தா இருக்காது,” என்றான் கூரியர் பாய்.

”ஏன்?,” என்று கேட்டார் சாரங்கபாணி.

“அந்த டிச்சியில எல்லாத்தையும் கொட்டி அளிச்சிடுவோம். நான் தான் அதையும் செய்யறது, ஒரு கேன் எடுத்துக் கண்ணே, ஜல்சா பண்ணு,”

சாரங்கபாணி தயங்கினார். சமாளித்துக்கொண்டு ஒரு ஐந்து லிட்டர் கேனைத் தூக்கி சைக்கிள் காரியரில் வைத்துக்கொண்டு நன்றி கூறி வெளியேறினார். எதாவது வீட்டுக்கு சாமான் வாங்க என்று எப்போதும் வைத்திருக்கும் காக்கிப் பைக்குள் கேனை போட்டு போர்த்தினார். அன்றிரவு தனக்கு மிகவும் வேண்டியவர்களோடு கூடிக் கொண்டாடிக் கொண்டிருந்தார். கடைசியாக இருந்ததை சாரங்கனின் மனைவியும் கொளுந்தியாவும் எடுத்துச் சென்றனர்.

ஒருநாள் குன்றத்தூர் காவல் நிலையத்திலிருந்து ரைட்டர் பரங்கிமலைத் தொலைப்பேசி இணைப்பகத்தின் வெளிப்புறப் பகுதி அலுவலகத்துக்கு (EXTERNAL UNIT) தொடர்புகொண்டு பேசினார். உடனே ஜே.இ., சாரங்கபாணியை அழைத்து ரிசீவரைக் கொடுத்தார்.

காவல்துறை ரைட்டர் பேசினார். ”சாரங்கு, ஒங்க பப்ளிக் பூத்லேயிருக்கிற காசு போட்டு பேசற காய்ன் பாக்ஸ காணோம்னு காலையிலேருந்து பத்து பேர் வந்து சொல்லிவிட்டுப் போயிட்டாங்க. நம்ம பி.சி.யும் போய் பாத்திட்டு வந்தாங்க. யாரோ கட் பண்ணி எடுத்திட்டுப் போயிருக்காங்க, நாங்களும் கம்ப்ளெயிண்ட் புக் பண்ணி நடவடிக்கை எடுத்திட்டிருக்கோம்.”

தொலைப்பேசி இணைப்பகத்திலும் இந்த புகார் பதிவு செய்யப்பட்டு டெலிஃபோன் இன்ஸ்பெக்டர் சாரங்கபாணியை பின்னால் உட்கார வைத்துக்கொண்டு மோட்டார் சைக்கிளில் குன்றத்தூருக்குப் புறப்பட்டுப் போனார்.

காவல்துறை வலைபோட்டுப் பார்த்து கண்டு பிடித்துவிட்டது. இருபது அம்ச திட்டத்தின் கீழ் வழங்கப்பட்ட பொதுத் தொலைப்பேசியின் பணப்பெட்டி (காய்ன் பாக்ஸ்) மலையடிவாரத்தில் உடைக்கப்பட்ட பரிதாப நிலையில் விழுந்து கிடந்தது. விரைவில் அந்தப் பொதுத் தொலைப்பேசியும் அகற்றப்பட்டது. காவல்நிலையத்தின் பார்வையிலிருக்குமாறு ஓரிடத்தைத் தேடிக் கொண்டிருந்தது துறை.

(தொடரும்)

# கண்டிய அரச வரலாறும் பிரசன்ன விதானகேயின் Gaadi-ம்

இளங்கோ

கண்டியில் தலதா மாளிகைக்குள் போனபோது அங்கே கண்டிய மன்னர்களின் பெயர்கள் பொறிக்கப்பட்டிருப்பதைப் பார்த்தேன். அத்தோடு சிங்களவர்கள் புத்தரின் பல்லென நம்பும் 'புனிதப்பல்' பற்றிய தகவல்களும் தலதா மாளிகையின் கடந்தகால வரலாறும் ஓவியங்களாக வரையப்பட்டிருந்தன. கண்டியே இலங்கையில் இறுதிவரை ஆங்கிலேயருக்கு எதிராக நிமிர்ந்து நின்ற இராச்சியம் என்கின்றபோதும், கண்டிய அரச வரலாறு மிகவும் சிக்கலானது. கண்டிய மன்னர்கள் காலத்துக்குக் காலம் மதுரை நாயக்கர் இளவரசிகளைத் திருமணம் செய்திருக்கின்றனர்.

கண்டி இராச்சியத்தில் மட்டுமில்லை, இலங்கையில் சிங்களவரின் வரலாற்றைச் சொல்கின்ற 'மகாவம்ச'த்திலேயே, முதல் சிங்கள மன்னனான விஜயனே பாண்டிய இளவரசியையே பட்டத்து இராணியாகத் திருமணம் செய்தான் எனப் பதியப்பட்டிருக்கிறது. அதனால்தான், சிங்களவர்கள் தம்மை ஆரியர்களைப் போல கலப்பின்றிய தூய இனமாக முன்வைக்கும்போது, 'உங்களின் வரலாறே தமிழினக் கலப்போடுதான் தொடங்குகின்றது; சிங்களவர்களே இந்த நாட்டின் முதல் குடியேறிகள் என்றால், அதேகாலகட்டத்தில் தமிழ் இரத்தமும் உங்களோடு கலந்துவிட்டது' என நாம் சொல்ல அவர்களின் 'மகாவம்ச' வரலாறே நமக்கும் சாட்சியாக இருக்கின்றது.

கண்டி இராச்சியத்து அரசர்கள் மதுரை நாயக்க இளவரசிகளைக் காலத்துக்காலம் மணம் முடித்து வந்தாலும், கண்டி இராச்சியத்தில் கடைசி ஒருநூற்றாண்டு (1739-1815) நான்கு நாயக்க மன்னர்களாலேயே நேரடியாக ஆட்சி செய்யப்பட்டிருக்கின்றது. இவர்கள் என்ன மொழியில் பேசி ஆட்சி புரிந்திருப்பார்கள், என்ன மதத்தைத் தங்களுக்குள் பின்பற்றியிருப்பார்கள் என்பது சுவாரசியமான ஆய்வுகளுக்குரியவை. ஏனெனில் சிறி விஜய ராஜசிங்க(ம்), கீர்த்தி சிறி ராஜசிங்க(ம்) போன்ற மன்னர்கள் நேரடியாகவே மதுரையில் இருந்து வந்தவர்கள். ஆகவேதான் கண்டியின் கடைசி மன்னனான சிறி விக்கிரம ராஜசிங்க(ம்)வின் கையெழுத்து தமிழில் வைக்கப்பட்டிருப்பது இப்போதும் ஆவணமாக நம் முன்னே இருக்கின்றது.



இந்த நான்கு நாயக்க மன்னர்கள் கிட்டத்தட்ட ஒரு நூற்றாண்டைக் கண்டியில் ஆட்சி புரிந்தாலும், இதற்கு முந்தைய நூற்றாண்டிலும் (1581-1591) ஒரு சுவாரசியமான சம்பவம் நடந்திருக்கின்றது. டிக்கிரி பண்டார என்பவர் சிறந்த போர் வீரனாக இருந்து, இலங்கை வரலாற்றில் மிகப் பிரசித்தி பெற்ற முல்லேரிவாயப் போரை போர்த்துக்கேயருக்கு எதிராக நடத்தி வெற்றி பெற்றிருக்கின்றார். இதன் நீட்சியில் ராஜசிங்க-1 மன்னனாக கண்டி இராச்சியத்தில் முடிசூட்டப்பட்டிருக்கின்றார். மன்னனான முதலாம் ராஜசிங்கன் பின்னர் இந்துமதத்திற்கு மாறியிருக்கின்றார். அப்படி மதம் மாறிய மன்னன் தமிழகத்திலிருந்து பல பிராமணர்களை சிவனொளிபாதமலைக்கு அருகில் குடியேற்றியிருக்கின்றார். இந்துமதம் மாறிய மன்னன் புத்த விகாரைகளை அழித்ததாகவும் நூற்றுக்கு மேற்பட்ட புத்தபிக்குகளை கொன்றதாகவும் சொல்லப்படுகின்றது. இந்தச் சம்பவம் குறித்து தலதா மாளிகையின் உள்மண்டபத்திலும் எழுதப்பட்டிருக்கின்றது. எது எப்படியென்றாலும் மிகச் சிறந்த போர்களை போர்த்துக்கேயருக்கு எதிராக நடத்திய சிங்கள மன்னன், இறுதியில் இந்து மதம் மாறி அட்டூழியங்களைச் செய்த ஒரு 'கெட்டவனாக' சிங்களவரின் புனிதக் கோயிலில் பதியப்பட்டிருப்பதென்பது வரலாற்று விந்தையான விடயந்தான்.

பிரசன்ன விதானகேயின் 'காடி' (Gaadi) திரைப்படமும் இந்தக் கண்டிய அரச பின்னணியில் இருந்து சொல்லப்படுகின்றது. இது கண்டிய கடைசி (தமிழ்) மன்னனான







சிறி விக்கிரம ராஜசிங்க(ம்)த்தின் காலத்தில் (1814-1815) நிகழ்கிறது. ராஜசிங்கவின் முக்கிய பிரதானியாக இருக்கும் எகலியபொல நிலமே, ராஜசிங்கவுக்கு எதிராக பிரிட்ஷாருடன் சேர்ந்து, ராஜசிங்கவின் ஆட்சியைக் கவிழ்க்கச் சதி செய்கின்றார்.

எகலியபொல ஓர் அடிகார். இப்போதைய இலங்கை வழக்கில் அடிகாரைப் பற்றிச் சொல்வதென்றால் அவர் ஒரு பிரதம மந்திரிக்கு நிகர்த்தவர். மன்னனை வெல்லும் அந்தச் சதியில் தாம் வென்றால், 'நான் அரசனாகவும் நீ அடிகாராகவும் ஆகலாம்' என்று எகலியபொல, புலத்காமதிஸாவேயிற்கு வாக்குறுதி கொடுக்கின்றார். எகலியபொலவும் புலத்காமவாவும் ஆங்கிலேயரோடு இணைந்து ராஜசிங்கனுக்கு எதிராகத் தொடுத்த முதல் யுத்தமானது தோல்வியில் முடிவடைய, இவர்கள் அனைவரும் ஆங்கிலேயரோடு சேர்ந்து தலைமறைவாகின்றனர்.

மன்னனை எதிர்த்துச் சதி செய்தவர்கள் என்றவகையில் புலத்காமாவின் நிலங்கள் பறிக்கப்பட்டு, அவரின் குடும்பத்தவர்களுக்குத் தண்டனை கொடுக்கப்படுகின்றது. அந்தக் குடும்பத்துப் பெண்கள் ஆற்றுக்குள் குதித்து தற்கொலை செய்யலாம். இல்லாவிட்டால் இன்னொரு தேர்வும் உண்டு. அது சாதி நிலையில் மிக இழிவாக வாழ நிர்ப்பந்திக்கப்பட்ட காடி சாதியினருடன் சேர்ந்து அந்த அரச குடும்பத்துப் பெண்கள் வாழலாம்.

அன்றைய காடி சாதியினரின் பெண்கள் இடுப்புக்கு மேலே எதையும் அணிவதில்லை. அதுவே அவர்களை மற்ற மேற்சாதி / அரச பெண்களிடமிருந்து விலத்திக் காட்டுகின்ற ஒரு கொடுமையான முறையாகும். அரசனால் தண்டனை கொடுக்கப்பட்ட அனைத்துப் பெண்களும் தற்கொலை செய்ய, புலத்காமாவின் இரண்டாவது மனைவியான டிக்கிரி மட்டும் தொடர்ந்து வாழும் முடிவைத் தேர்ந்தெடுக்கின்றார்.

மறுகரையில் காத்திருக்கும் காடி (கிட்டத்தட்ட அடிமைகள் மாதிரியே ஆதிக்க சாதிகளால் நடத்தப்படுகின்றனர்) சாதியில் முதலில் இக்கரைக்கு நீந்தி வரும் ஆணே அவளுக்குரிய துணையாகப் போகின்றவன். விஜயா என்கின்றவர் முதலாவதாக நீந்திக் கரையேறி டிக்கிரியை அடைகிறார். இப்போது டிக்கிரி மேலாடை கிழிக்கப்பட்டு அரை நிர்வாணமாக்கப்பட்டு காடி சாதியில் ஒருவராக ஆக்கப்படுகின்றார்.

இதன்பின் திரைப்படம் முழுதும் டிக்கிரியினதும் விஜயனின் தப்பிப் பிழைத்தல் பற்றிய காட்சிகளாய் விரிகின்றன. டிக்கிரியால் ஒடுக்கப்பட்டோர் வாழ்வு முறைக்குள் அவ்வளவு எளிதாக மாற முடியாதிருக்கின்றது. காடி சாதியினர் வேலை எதுவுமே செய்ய அனுமதிக்கப்படாது, பிறரிடம் இரந்து வாழ்பவர்களாக மட்டும் ஆக்கப்பட்டவர்கள். அப்படி இரந்து வாழும் கூட்டத்தில் மேலாடையைக் கைவிடாது, இன்னமும் அதை அணிந்தபடி இருக்கும் டிக்கிரியால், காடி சமூகத்தினர் ஆதிக்கசாதியினரால் பல்வேறு தண்டனைகளை அனுபவிக்கின்றனர்.

இறுதியில் குழுவாக வாழும் காடி சமூகத்திலிருந்து, விஜயாவும் டிக்கிரியும் பிரிந்து வாழத் தலைப்படுகின்றார்கள். அதற்காய் அடர்ந்த காடுகளைத் தேடி வேறொரு நிலத்திற் குள்

நுழைகின்றனர். அங்கே தமது சாதி அடையாளங் களைத் துறந்து விஜயாவும் டிக்கிரியும் மேற்சாதியினரைப் போல தம்மை ஆக்கிக் கொள்கின்றார்கள். எருதுகள் பிடித்து விற்று தம் வாழ்வைக் கொண்டு செல்கின்றனர்.

மீண்டும் எகலியபொலவும் டிக்கிரியின் கணவரும் பிரிட்டிஷ்காரருடன் சேர்ந்து ராஜசிங்கவை வீழ்த்த போர் தொடுக்கின்றனர். அந்தவேளையில் தற்செயலாக காடியாக வாழ நிர்ப்பந்திக்கப்பட்ட டிக்கிரி தனது கணவன் முன் தோன்றுகின்றார். ஆனால், கணவன் அவரை ஏற்றுக்கொள்ளாது மேலாடை அணிந்தபடி இருக்கும் காடி இவள் என்று தண்டனை கொடுக்கப் பணிக்கின்றார். இறுதியில் டிக்கிரியையும் விஜயாவையும் காடி சமூகத்திலிருந்து தப்ப வைத்ததற்காய், காடி முழுச் சமூகமும் எகலியபொலவாலும் புலத்காமாவாலும் படுகொலை செய்யப்படுகின்றனர்.

இப்போது கண்டி ராச்சியம் ஆங்கிலேயரால் கைப்பற்றப்பட்டு விடுகின்றது. ராஜசிங்க(ம்) கண்டியிலிருந்து பிடிக்கப்பட்டு கைதியாக வேலூர் சிறைக்கு அனுப்பப்படுகின்றார். தமது முழுச் சமூகத்தையும் இழந்த விஜயனுக்காய் டிக்கிரி ஒரு முக்கிய முடிவை எடுக்கின்றார். அது அந்தச் சமூகம் முற்றாக அழிந்து போகாது இருப்பதற்கான முக்கிய காலடியாகும். அத்துடன் திரைப்படம் முடிவடைகின்றது.

இன்றிருக்கும் சிங்கள நெறியாளர்களில் எனக்கு மிகப்பிடித்தவர் பிரசன்ன விதானகே. இவருக்குப் பிறகே அஷோக ஹந்தகம, விமுத்தி ஜெயசுந்தரா போன்றோரை முன்வைப்பேன். அதிக அலட்டலில்லாத காட்சிகளாலும் உலுக்க வைக்கும் சம்பவங்களில்லாதும் அவ்வளவு ஆழமாக எங்களுக்குள் உரையாடலை விதைப்பவை பிரசன்னவின் திரைப்படங்கள். இந்தத் திரைப்படம் முழுதும் காட்டுக்குள்ளே நடக்கின்ன்றன. அவ்வளவு பசிய பின்னணி. சும்மா கொஞ்சம் மலையேறிப் போய் ஷூட் வைத்தாலே அதை அதிசயம் போலப் பேசும் தமிழகத் திரைப்படக்காரர்கள் இந்தப் படத்தின் காட்டைப் பார்க்கவேண்டும். அவ்வளவு கஷ்டப்பட்டு எடுத்தபோதும், அதை பார்ப்பவர்களே தீர்மானிக்கட்டும் என்று அமைதியாகவே இருக்கும் பிரசன்னாவிடமிருந்து தமிழக இயக்குநர்களைக் கற்றுக்கொள்ளுங்களெனச் சொல்லப்போவதில்லை. அவர்கள் நாம் அறிவுரை கூறும் நிலைமைக்கு மேலே சென்றுவிட்டார்கள். ஆனால், ஈழத்தில் தமிழ்ப் படங்களை எடுக்கும் நெறியாளர்கள் / படங்களை எடுக்க விரும்பும் திரைப்பட ஆர்வலர்களை பிரசன்னா விதானகே, அஷோக ஹந்தம, விமுத்தி ஜெயசுந்தராவின் அனைத்துத் திரைப்படங்களையும் பார்க்க வேண்டுமெனப் பரிந்துரைப்பேன். குறைந்த முதலீட்டுடன், ஈழத்துக்குரிய கதைகளை எப்படி அற்புதமாக எடுக்கலாம் என்பதை இவர்களிடமிருந்து அறிந்துகொள்ளலாம். உண்மையான ஆர்வத்துடன் அவர்களை அணுகினால் நமக்குக் கற்றுத்தரவும் அவர்கள் ஆர்வமாக இருப்பார்கள்; அவ்வளவு எளிமையானவர்களும் கூட.



பிரசன்ன விதானகே

இந்தத் திரைப்படத்தில் டிக்கிரியாக நடித்திருக்கும் டினாரா புஞ்சிவாவிற்கு இது முதற்படம். ஆனால், எப்படியொரு அற்புதமான நடிப்பை பிரசன்னா இவரிடமிருந்து பெற்றிருக்கின்றார் என்பதைத் திரைப்படம் பார்க்கும் போது நமக்குப் புரியும்.

இத்திரைப்படம் பற்றி ஓரிடத்தில் பிரசன்னா கூறும்போது, ‘காடி சமூகத்தின் பெண்கள் அன்று மேற்சட்டை இல்லாது (topless) இருந்ததை திரையில் காட்சிப்படுத்தத்தான் கடினமாக இருந்தது’ என்று குறிப்பிட்டிருப்பார். அந்த அரை நிர்வாணத்தைக் கூட நமக்குப் புரியும்படியும், அதை சமயம் இலங்கை போன்ற நாடுகளில் இருக்கும் தணிக்கை விதிகளையும் பின்பற்றி எப்படி நுட்பமாக எடுத்திருக்கின்றார் என்பதில்தான் ஒரு நெறியாளரின் மேதமை விளங்கும். பிரசன்னா அப்படிப்பட்டவர். இந்தத் திரைப்படமும் அப்படிப்பட்டதே.

அன்றைய காலத்து அரச கதையை, இன்றைய காலத்துக்கு ஏற்றமாதிரியும் மாற்றி (அரச இடாம்பீக செட்டுக்களுக்கு எல்லாம் வீணாகச் செலவழிக்காது), நம்மை நெகிழவைக்கும் ஒரு கதையை இயற்கையின் அவ்வளவு வனப்பான பின்னணியில் வைத்து பிரசன்னா தந்திருக்கின்றார். பிரிட்டிஷ் ஆட்சியின் பின் வந்த சட்டங்களினால் காடி என்ற தனித்த சாதியினர் இல்லாதுபோய், அவர்கள் பின்னர் ஒடுக்கப்பட்ட சாதிகளுக்குள் கலந்துவிட்டனர் என்று சொல்லப்படுகின்றது. ஆனால், இன்னமும் சாதிப் படிநிலைகளும் சாதிய ஒடுக்குமுறைகளும் ஆதிக்கசாதி மனோபாவங்களுமுள்ள நம் சமூகம் கற்றுக்கொள்ளவதற்கு இத்திரைப்படத்தில் எவ்வளவோ நிறைய விடயங்கள் இருக்கத்தான் செய்கின்றன.

**“இளங்கோ”** <elanko@rogers.com>

## நண்பகல் நேரத்து மயக்கம்

# காணாமல் போனவனும் காணாமல் போய்க்கொண்டிருப்பவனும்

அ. ராமசாமி

### கலைத்தன்மைச் சினிமா என்னும் தனித்துவம்

லிஜோ ஜோஸ் பெல்லிசேரி தனது சினிமாக்களை, குறிப்பான சூழல் என்ற அடிப்படையில் மற்றவர்களின் சினிமாவிலிருந்து வேறுபடுத்துகின்றார் எனத் தோன்றுகிறது. அதனாலேயே அவரது சினிமாக்களை நடப்பியல் வகை சினிமாவின் சட்டகங்களுக்குள் வைத்துப் பேசமுடிவதில்லை. தனித்தனியாகப் பார்த்தால், நிகழ்கால வாழ்க்கையில் நடக்கும் நிகழ்வுகளையே அவரது சினிமாக்கள் காட்சிப்படுத்தியுள்ளன என்று தோன்றும். ஆனால், அவையெல்லாம் எல்லாருடைய வாழ்க்கையிலும் ஒவ்வொரு வெளியிலும் நடக்கக்கூடியன என்று உறுதியாகக் கூறமுடியாது. 'நண்பகல் நேரத்து மயக்கம்' படத்தில் இடம்பெற்றுள்ள காட்சிகள் ஒவ்வொன்றும் தனித்தனியாக நடக்கும் வாய்ப்புகள் கொண்ட காட்சிகள் தான். அதே நேரம் ஒட்டுமொத்தமாக இது சாத்தியமா? என்ற வினாவைப் பெரிய வினாவாக எழுப்பிக்கொண்டே இருக்கும் படமாகப் பார்வையாளர்கள் முன்னால் விரித்து நகர்த்திக்கொண்டே இருக்கிறது.

கலைத்தன்மை கூடிய ஒரு சினிமா, வணிக வெற்றியை நோக்கமாகக் கொண்ட சினிமாக்களிலிருந்து பலநிலைகளில் வேறுபாடுகள் கொண்டதாக இருக்கும். அவற்றுள் முதன்மையான வேறுபாடாக இருப்பது இந்தப் பொதுத்தன்மையைக் கைவிடுவது என நினைக்கிறேன். ஒரு சினிமாவில் அனைத்துத் தரப்புப் பார்வையாளர்களுக்கும் விருப்பமான கூறுகள் இடம்பெறவேண்டும் என நினைக்காமல், அந்தச் சினிமாவுக்கான இலக்குப் பார்வையாளர்கள் யார்? என்பதை முடிவு செய்துகொண்டு அவர்களை நோக்கித் தனது படத்தை முன்வைப்பதைக் கலைத்தன்மை கூடிய பட இயக்குநர்கள் விரும்புகிறார்கள். இலக்குப் பார்வையாளர்களோடு உரையாடுவது என்பதை, அவர்களின் எண்ணங்களோடும் சிந்தனைத் தளத்தோடும் உரையாடல் செய்வதாகப் புரிந்துகொள்ளவேண்டும். அந்த நோக்கத்திலேயே அதன் இயக்குநர் கதைப்பின்னலையும் காட்சிகளையும் நடிப்புமுறையையும் காமிராக்கோணங்களையும் இசைக்கோலங்களையும் தெரிவுசெய்கிறார்கள். கலைத்தன்மைச் சினிமாவின் இயக்குநர்கள் எல்லா இடங்களிலும், எல்லாச் சூழலிலும் நடக்கும் சாத்தியங்கள் கொண்ட காட்சிக்கோர்வைகளின் தொகுப்பாகச் சினிமாவை உருவாக்குவதில்லை. வெளி, காலம் இரண்டையும் உள்ளடக்கிய குறிப்பான சூழலில் மட்டுமே இப்படத்தில் இடம்பெறும் காட்சிகள் நடக்கக்கூடியன என்பதாக உருவாக்கித் தொகுத்துத் தருகிறார்கள். தொகுப்பதில் கூட ஒரு நேர்கோட்டுத்தன்மை உருவாகி விடுவதைத் தவிர்க்க நினைக்கிறார்கள்.



### மறதி - மரணம் - மறு உயிர்ப்பு: படத்தின் கருத்தியல் சொல்லாடல்கள்

மறதி மனிதர்களின் பொதுவான குணம் அல்லது வினைப்பாடுகளுள் ஒன்று. செயலின் தொடர்ச்சியில் ஏற்படும் தடை என்பதாக மறதி விளக்கப்படுகிறது. அந்த

விளக்கத்தை ஒவ்வொருவரும் ஏற்றுக்கொண்டு மறதியை அதன் போக்கில் கடந்துகொண்டுதான் இருக்கிறார்கள். சிறுகணப்பொழுதில் - நொடிக்கணக்கில், நிமிடக்கணக்கில் ஏற்படும் மறதிகளைச் சந்தித்த நிகழ்வுகளை இன்னொருவரிடம் சொல்லும்போது சுவாரசியம் ஏற்படுவதுமுண்டு. ஏறவேண்டிய பேருந்தில் ஏறாமல் திசைமாறிப்போன பயண அனுபவங்களையும் பெறவேண்டிய / தரவேண்டிய தொகைக்குப் பதிலாக அதிகமாகவும் குறைவாகவும் கைமாறிய அனுபவங்களையும் சின்னத் தடுமாற்றத்தில் அறிமுகம் இல்லாதவர்களின் தோள்களைப் பற்றி அசடு வழிந்த கணவன் - மனைவி / காதலி போன்ற காட்சிகளும் நினைவில் வருகின்றன; திரைப்படங்களில் இடம்பெற்றுள்ளன; இலக்கியங்களிலும் பதிவுசெய்யப்பட்டுள்ளன.

குறிப்பிட்ட சூழலில் தன்னை மறத்தல் என்பதை மருத்துவ அறிவியல் ஒரு வியாதியாக வகைப்படுத்திக் காட்டும். மனநல மருத்துவத்தின் பகுதியாகப் பேசப்பட்டுச் சிகிச்சை முறைகளையும் பரிந்துரைக்கும். மறதியின் மையமாக இருப்பது மனம் என்பதுவரை அல்லது எண்ணங்களாக இருப்பதுவரை ஏற்கத்தக்கனவாக இருக்கிறது. மனத்தின் பகுதியாக இல்லாமல் மறதி உடலின் பகுதியாக அறியப்படும் நிலையில் போதிய விளக்கத்தை மருத்துவ அறிவியல் தருவதில்லை. பருண்மையான தனது உடலை மறத்தல் நடக்குமா? என்ற கேள்விக்குப் பதில் சொல்ல முடியாமல் தவிப்பதுண்டு. சாதாரணப்புரிதலில் ஏமாற்று என்று விளக்கம் சொல்லவும் கூடும்.

மறதியின் தொடர்ச்சியைப் போலவே மரணம், மறுபிறப்பு போன்ற கருத்தாக்கங்களைச் சமய நூல்கள் விளக்குகின்றன. ‘உறங்குவது போலும் சாக்காடு; உறங்கி விழிப்பதுபோலும் பிறப்பு’ என்ற குறளுக்குப் பின்னால் இருக்கும் கருத்தியல் இவ்வகைப்பட்டதாகவே இருக்கும். ஒரே பிறவியில் சிறிய இடைவெளியில் ஏற்கெனவே அறியப்பட்ட உடலுக்குள் இருக்கும் உயிர் பிரிந்து போய்விட்டுத் திரும்பவும் வருதல் பற்றிய நிகழ்வுகளைப் பேசும்போது நிகழ்கால மனிதர்களின் மனம் ஏற்பதில்லை. அதிலும் ஓர் உடலுக்குள் இன்னொரு உடலுக்குரிய உயிர் நுழைந்து செயல்படும் நிகழ்வை மருத்துவம் மறுதலிக்கிறது. அதையும் நோயாகவே கருதுகிறது. ஆனால், இதுபோன்ற நிகழ்வுகளைச் சமயம் சார்ந்த நம்பிக்கைகள் இயல்பாக நினைக்கின்றன. பேய் பிடித்தல், ஆவி ஏறுதல், சாமியாடுதல் போன்றனவற்றைக் கிராமத்து வாழ்க்கையில் அதீத நிகழ்வுகளாகக் கருதி ஏற்றுக்கொண்டு கடப்பதைப் பார்க்கிறோம். இதனையே மாந்திரீகம், தாந்திரிகம் போன்ற செயல்பாடுகளில் ஈடுபாடு கொண்டவர்கள் அற்புத நிகழ்வுகளாக முன்வைக்கிறார்கள். கூடுவிட்டுக் கூடு பாய்ந்து காலத்திற்குள்ளாகப் பயணம் செய்து திரும்ப முடியும் என்று விளக்கி நம்பச்செய்கின்றனர்.

கர்மம், மறுபிறப்பு போன்றனவற்றை முன்வைக்கும் சமய அறிவுச் சொல்லாடல்களும் இதனை விவாதிக்கின்றன. இயல்பான மரணங்கள், இயல்பற்ற மரணங்கள் (அகால மரணம்) என மரணங்களை விவாதிக்கும் நிலையில் இயல்பற்ற மரணத்திற்குப் பிறகு உயிர் அல்லது ஆன்மா இங்கேயே ஆவியாகச் சுற்றிக்கொண்டிருக்கிறது என்பது நம்பிக்கையின் ஓரடையாளம். அது தனக்கான உடலைத் தேடிக் கண்டுபிடித்து அவ்வப்போது நுழைந்து வெளியேறும் என்பது அதன் நீட்சி. அத்தகைய நிகழ்வுகளுக்குக் குறிப்பான காலச்சூழல் இருப்பதாகவும் கருதுகிறார்கள். நட்ட நடுச்சாமம் உகந்த காலமாக நம்பிக்கை கொண்டவர்களால் அதிகம் உச்சரிக்கப்படுகிறது. அதற்கிணையாக இல்லையென்றாலும் உச்சிப்பொழுது வேலை - நண்பகல் நேரமும் ஆவிகள், பேய்கள், சாமிகள், ஆன்மாக்களுக்குரிய நேரம் என்பதும் நம்பிக்கை தான். ஆவிகள் உலாவும் நேரமாக நண்பகல் நேரமும் இருக்கிறது. ஆழ்ந்த உறக்கம் அல்லது மயக்க நிலையில் ஒருவரது உடல் மறதி நிலையில் இருக்கும். அந்த மறதி நிலையில் இன்னொரு உயிர் / ஆன்மா அதற்குள் நுழைந்து ஏற்கெனவே இருக்கும் உயிரை / ஆன்மாவை இடம்பெயர்த்துவிட்டுக் குடியேறிக்கொள்ளும். பெல்லிசேரியின் சினிமா - நண்பகல் நேரத்தைத் தெரிவு செய்துள்ளது. அதனாலேயே பேய்ப் படமாகப் பார்க்கப்படுவதிலிருந்து தப்பித்திருக்கிறது. நள்ளிரவு நேரத்தைத் தேர்வுசெய்திருந்தால் பேய்ப்படமாகப் பார்க்கப்பட்டிருக்கும்.

***

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் தனது குடும்பத்தைவிட்டுப் பிரிந்து போனவரின் கதி என்ன என்பதை முடிவுசெய்யாமல் இருக்கும் குடும்பம் அது. காணாமல் போனவர் திரும்ப வருவார் என்ற நம்பிக்கையை அவர்கள் தொலைக்காமல் இருக்கிறார்கள். 24 மணி நேரமும் தொலைக் காட்சி வசனங்களையும் பாடல்களையும் கேட்டுக்கொண்டே மகன் நினைவைத் தக்கவைக்கும் கண் பார்வையற்ற அம்மாவின் நம்பிக்கை முழுமையானது. தனக்கடுத்துக் குடும்ப பாரத்தைச் சுமக்கவேண்டிய மகன் இப்படித் தவிக்கவிட்டுவிட்டுப் போய்விட்டானே என ஏக்கத்தோடு திண்ணையில் அமர்ந்திருக்கும் தந்தையின் நம்பிக்கை முழுமையானதல்ல; ஆனால், வரமாட்டான் என்று அவர் முடிவும் செய்துவிடவில்லை.

பணிவோடு உணவு பரிமாறி, உடைகளை எடுத்துக் கொடுத்துக் கணவனைப் பார்த்துக்கொண்ட மனைவி; அவளைத் தவிக்கவிட்டுவிட்டுப் பிரிந்து போவதற்குத் தனது புருசனுக்கு என்ன காரணம் இருந்திருக்கும்? என்பதையே நினைத்துக்கொண்டிருக்கும் அவளுக்குள் இருப்பது குழப்பம் மட்டும் அல்ல; திரும்புவார் என்ற எதிர்பார்ப்பும்.

இம்மூவருக்குள்ளும் இருப்பது காணாமல்



போனவனின் உடல் அல்ல; அவனது மனம், அவனது குரல், அவனது பரிவு, அவனது அன்பு, காதல். இதற்கு மாறாக அதையெல்லாம் முழுமையாகப் பெற்றுக்கொள்ளாத மகளிடம் வெளிப்படுவது நம்பிக்கையின்மை. குடும்பத்தைக் காப்பாற்றும் பொறுப்பைக்கைவிட்டுவிட்டுக்காணாமல்போனவர் திரும்பப் போவதில்லை என்ற தீர்க்கமான முடிவு அவனது உறவினரான சகோதரனுக்கு இருக்கிறது. ஊராருக்கு காணாமல் போனவன்; போனவன் தான்.

ஆனால், காணாமல் தொலைந்து போகவில்லை; காணாமல் போனவன் இல்லாமல் ஆகிவிட்டான். ஆனால், ஆவியாக மாறி அந்தக் கிராமத்தின் எல்லையில் சுத்திக் கொண்டிருந்தான். ஒரு நண்பகல் நேரத்தில் இன்னொருவனின் உடலில் புகுந்து தனது வீட்டிற்கு வந்து பழைய காரியங்களையெல்லாம் செய்து பார்த்துவிட்டுத் திரும்பிப் போய்விடுகிறான்.

***

புற உலகத்து மனிதர்கள், ஒரு மனிதனை உடலாக மட்டுமே அறிந்துகொள்கிறார்கள்; பழகுகிறார்கள். ஆனால், நெருங்கிய/அகத்தை அறிந்த மனிதர்கள் உடலாக மட்டுமல்லாமல் மனதாகவும் அறிந்துகொள்கிறார்கள். மனத்தின் வெளிப்பாட்டை உணர்த்தும்கருவிமொழியாகஇருக்கிறது. கிறித்தவமதச் சடங்குகளிலும் கடவுள் கொள்கையிலும் நம்பிக்கை கொண்ட மலையாளியான ஜேம்ஸின் உடலுக்குள் புகுந்துகொண்ட சுந்தரத்தின் ஆவி வெளிப்பட்டது உள்ளூர் தெய்வங்களை வணங்கும் ஒரு தமிழ் ஆளாக. உடல் மொழியாலும் குரல்மொழியாலும் நிரப்பப்பட்ட ஜேம்ஸின் உடலை சுந்தரமாக மாறி 'நான் சுந்தரம்; இதுதான் என் ஊரு' என்கிறான். வந்திருக்கும் உடல் ஜேம்ஸின் உடல் என்றபோதிலும் சுந்தரத்தின் அம்மை, அப்பா, மனைவி ஆகியோர் சுந்தரமே வந்திருப்பதாக உணர்கிறார்கள்.

மறதி, மரணம், ஆன்மா, கூடுவிட்டுக் கூடுபாயும் நம்பிக்கை என்பதான சொல்லாடல்களின் மேல் உருவாக்கப்பட்டுள்ள 'நண்பகல் நேரத்து மயக்கம்' சினிமா, விரிக்கப்பட்டுள்ள காட்சிகள் வழியாக நிகழ்காலச் சினிமாவாக - நவீன சினிமாவாகத் தன்னை முன்வைக்கிறது. கேரளக் கிராமம் ஒன்றிலிருந்து தமிழ்நாட்டின் வேளாங்கன்னிக்குப் பக்திப் பயணம்மேற்கொள்ளும் குடும்பங்களின் இடை நிற்றலில் தொடங்கும் காலைக்காட்சியும் நண்பகல் பயணமும் நகைச்சுவையான உரையாடல்கள் வழியாக விரிக்கப்பட்டுள்ளன. படத்தின் தொடக்க நிலைக்காட்சிகளில் சிடுக்குகளோ சிக்கல்களோ இல்லை. பயணச் சத்திரம் ஒன்றில் தங்குதல், பயணத்தைத் தொடங்குதலில் தாமதம் ஏற்படுத்தும் ஜேம்ஸின் விலகலான மனநிலை, இடைநிற்றலில் மற்றவர்களோடு இணைந்தும் விலகியும் பேசும் அவனது போக்கு என்பதைக் கொண்டு அவனது உடலுக்கு நடக்கப்போகும் விசித்திரம் முன்னறி விப்பாக உருவாக்கப்பட்டுள்ளது. அனைவரும்

தூங்கும்போது அவன் மட்டும் விழித்திருப்பதும் குழம்புவதுமான மனநிலையில் இறங்கி நடக்கத் தொடங்குகிறான். பேருந்திலிருந்து இறங்கிக் கிராமத்து மண் சாலையில் இறங்கும்போது அவன் முழுமையாகச் சுந்தரமாக மாறுகிறான். ஜேம்ஸின் உடல் மொழியும் மலையாளப் பேச்சுமொழியும் வெளியேறிக்கொள்ள, சுந்தரத்தின் உடல்மொழியும் தமிழ்ப் பேச்சுமொழியும் நிரம்பிக்கொள்கின்றன. வருவது சுந்தரம் தான் என்பதை உணர்ந்து கொண்டனவாக அக்கிராமத்தின் விலங்குகளும் பறவைகளும் இருந்தன என்பதைக் காட்டுவதின் வழியாக இயக்குநர் உணர்த்துகிறார். மின்சாரக் கம்பங்களில் - கம்பிகள் அமர்ந்திருக்கும் காகம் அவனை அந்நியனாக நினைத்துக் கூவவில்லை; நாய்கள் குரைக்கவில்லை; சுந்தரத்தின் வீட்டு மாடுகள் மிரளவில்லை. பறவைகளும் மிருகங்களும் ஆவியையும் ஆன்மாவையும் அறிந்துகொள்ளும் சக்தி கொண்டவை என்பதும் கிராமப்புற நம்பிக்கைகள் சார்ந்தவையே.

## கலை ஆக்கலின் திறன்கள்

முந்திய பெல்லிசேரியின் படங்களிலிருந்து 'நண்பகல் நேரத்து மயக்கம்' பெரிய மாற்றம் ஒன்றைக் கொண்டுள்ளது. பொதுவாகக் கலைச்சினிமா இயக்குநர்கள் ஒவ்வொரு படத்திற்கும் வெவ்வேறு வடிவங்களைத் தேர்வுசெய்வார்கள். சொல்முறை மூலமாக - பயன்படுத்தும் நடிப்பு முறை மூலமாக - உண்டாக்கும் குறியீடுகள், படிமங்கள் வழியாக என ஒவ்வொன்றிலும் ஒரு சோதனையைச் செய்து பார்ப்பதுண்டு. குறியீட்டுப் பாத்திரம், குறியீட்டு நடிப்பு, அபத்த வெளிப்பாட்டுப் படிமங்கள், தூரப்படுத்தும் காமிராக்கோணங்கள் போன்றவற்றைப் பயன்படுத்திய இயக்குநர் இப்படத்தில் முழுமையும் நேர்கோட்டில் கதையைச் சொல்லியிருக்கிறார். காட்சிகளில் இடம்பெறும் பாத்திரங்களை ஏற்று நடித்துள்ள நடிகர்களை நடப்பியல் தன்மையோடு நடிக்கவைத்துள்ளார். இருதளங்களில் பிளவுகொண்ட பாத்திரங்களை ஏற்று நடித்துள்ள நடிகர்கள் ஒவ்வொருவரும் பாத்திரங்களின் இயல்பில் விலகாமல் வெளிப்பட்டுள்ளனர். அதன் வழியாகப் பார்வையாளர்களுக்கு இருவித உணர்வுகளும் மாறிமாறிக் கலவையாகத் தரப்பட்டுக்கொண்டே இருக்கிறது. இப்படத்தில் நடித்துள்ள நடிகர்களின் தேர்ந்த நடிப்பை இதற்கு முன்பும் பார்த்து ரசித்திருக்கிறோம். இதில் முழுமையாகத் தங்களை வெளிப்படுத்த முயன்றுள்ளனர். குறைவான நேரமே வந்துபோகிறவர்கள்கூட நடிப்பில் குறைவைக்கவில்லை

நடுத்தரவர்க்க வாழ்க்கைக்குள் இருக்கும் குடும்பங்களின் புனிதச் சுற்றுலாவில் இருக்க வாய்ப்புள்ள நகைச்சுவைக் காட்சிகளோடு தொடங்கும்போது உருவாக்கப்படுவது ஒருவித அங்கதம் கலந்த நகைச்சுவை உணர்வு. அவ்வுணர்வு இடையில் நிறுத்தப்பட்ட பேருந்திலிருந்து ஜேம்ஸ் காணாமல் போய்விட்டார் என்ற நிலையில் உருவாவது தவிப்பும் எரிச்சலுமான உணர்வுகள். ஜேம்ஸின் மனைவிக்கும் பிள்ளைக்கும் கூட எரிச்சலோடு கூடிய தவிப்புதான் வெளிப்படுகிறது. பக்கத்துக் கிராமத்திற்குள் ஜேம்ஸ் இருக்கிறான் என்ற நிலையில் தவிப்பு தீர்கிறது. ஆனால், அவர் வேறொரு ஆளாகத் திரிகிறான் என்ற நிலையில் திகைப்பும் குழப்பமும் உருவாகிறது. மற்றவர்களுக்குச் சுற்றுலாப் பயணம் என்னாகும் என்ற குழப்பம். ஜேம்ஸின் மனைவிக்கும் பிள்ளைக்கும் வாழ்க்கை என்ன ஆகும் என்ற தீர்க்கமுடியாத சிக்கலை எதிர்கொள்ளப் போகிறோம் என்ற தவிப்பு. இந்த மனவோட்டங்களும் உணர்வுக் கலவைகளும் கண்முன்னே ஒருவன் காணாமல் போய்க்கொண்டிருப்பதைச் சந்திக்கும் மனிதர்களின் பரிதாபமான கையறு நிலை.

காணாமல் போய்க்கொண்டிருக்கும் ஒருமனிதன், காணாமல் போன ஒரு மனிதனாகத் தோன்றும்போது கிடைக்கும் ஆசுவாசம், ஐயம், திகைப்பு, மிரட்சி, நடைமுறையில் இதுபோன்ற நடப்புகளால் ஏமாற்றப்படும் வாய்ப்புகள் உள்ளன என்பதையிட்டு உண்டாகும் கலவரம் என அந்தக் குடும்பமும் ஊரும் சந்திக்கும் உணர்வுகளும் மனவோட்டங்களும் தனியாக உருவாக்கப்பட்டுள்ளன. தனித்தனியான மனவோட்டங்களை ஒருகட்டத்தில் இணைநிலையாக மாறிமாறிக் காட்டிப் பார்வையாளர்களை அதற்குள் ஈர்த்துக்கொள்கிறது படம். பார்க்கும் ஒவ்வொருவரும் மலையாளம் பேசும் மனிதர்களோடும் தமிழ் பேசும் மனிதர்களோடும் விலகலின்றி அந்தக் கிராமத்திற்குள் அலையவேண்டும் என்பதைத் தனது படமாக்கலின் நுட்பமாக வைத்துள்ளார் இயக்குநர் பெல்லிசேரி. அந்த இடத்தில் தனது படத்தை நடப்பியல் படத் திலிருந்து மாய நடப்பியல் படமாக மாற்றிவிடுகிறார்.

## காட்சிக்கோர்வை x இசைக்கோர்வை

பசுமையான இயற்கைப் பின்னணி கொண்ட கேரளக் கிராமத்து மனிதன் ஒருவன், வெக்கையும் புழுதியும் நிரம்பிய தமிழ்நாட்டுக் கிராமத்தைத் தனது கிராமமாக நினைக்கத் தொடங்கிக் கலந்து - காணாமல் போகும் ஆச்சரியம் என்பதற்குள் ஓர் எதிர்வு இருக்கிறது. மனைவியின் கால்வலிக்குத் தைலம் தேய்த்துவிட்டுத் தூக்கிக் கொண்டு போகக்கூடத் தயாராக இருக்கும் கணவன், அவளை மறந்துவிட வாய்ப்பிருக்கிறதா? என்ற கேள்வி இருக்கிறது. அதன் மறுதலையாக இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் போன சுந்தரம் பற்றி எந்தத் தகவலும் இதுவரை இல்லை என்ற உறுதி இருக்கிறது. அவனது குடும்பத்தைப் பராமரிக்கும் வேலையை ஏற்றுக்கொண்ட சகோதர உறவுகளின் தீர்மானமான நிலை இருக்கிறது. இவையெல்லாம் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. காட்சிகளில் தோன்றும் தேர்ந்த நடிகர்களும் நடிகைகளும் இயல்பான உடல்மொழியாலும் குரலாலும் உண்மையான நடப்புகளே இக்காட்சிகள் என்ற தோற்றத்தை



லிஜோ ஜோஸ் பெல்லிசேரி

உண்டாக்கிக்கொண்டே இருக்கிறார்கள். ஆனால், அக்காட்சிகளுக்குப் பின்னால் உருவாக்கப்பட்டுள்ள சத்தங்களும் ஓசைகளும் அவற்றோடு பொருந்தாமல் விலக்கலை உண்டாக்கிக் கொண்டே இருக்கின்றன. இது இயக்குநரே திட்டமிட்டு உருவாக்கும் தூரப்படுத்தும் உத்தி.

நம்பத்தக்க உணர்வுகளைக் காட்சிப்படுத்திக் கொண்டே இருக்கும் காமிராவின் வேலைக்கு எதிராகப் பின்னணி இசை அக்காட்சிகளின் மீது விலகலை ஏற்படுத்திக்கொண்டே இருப்பது ஏன் என்று கேள்வியைப் பார்வையாளர்களிடம் எழுப்ப நினைத்துள்ளார் இயக்குநர். அவ்விலகல் வழியாக காட்சிகள் உருவாக்கும் வாழ்க்கையின் மீதும், வாழ்வதாக நம்பிக்கை கொண்டிருக்கும் மனிதர்களின் நம்பிக்கைகள் மீதும் அபத்தத்தை உண்டாக்குகிறார். அபத்தத்தை உண்டாக்க இயக்குநர் தேர்வு செய்துள்ள சங்கதிகள் அவரது கலையியல் பார்வைக்கும் செய்நேர்த்திக்கும் சிறப்பான இடத்தை அளித்துள்ளன. மிகையுணர்ச்சியோடு நடிகர்கள் பாத்திரமாக மாறிக் கொண்டிருக்கும்போது ஒலிக்கும் பழைய தமிழ்ச்சினிமாக்களின் உரையாடல்களும் பாடல்வரிகளும் உண்டாக்குவது ஒருவித எள்ளலும் அங்கதமுமான நகைச்சுவை உணர்வு. அதன் வழியாகவே பார்வையாளர்கள் அக்காட்சியிலிருந்து விலக்கப்பட்டு, அதனை குறித்து யோசிக்கும்படி தூண்டப்படுகிறார்கள். பார்வையாளர்களின் சிந்தனைக்கு எதையுமே தராத பொழுதுபோக்குக் குப்பைகளே தமிழ்ச் சினிமாக்கள் என்ற பொதுவான விமரிசனப்பார்வையை மறுபரிசீலனை செய்யவேண்டும் என்று நினைக்கத் தக்க அளவுக்கு வாழ்க்கை என்றால் என்ன? அதன் சிடுக்குகளுக்குள் சிக்கிய மனிதன் எப்படி வெளிப்பட்டான், மரணம் என்றால் என்ன? அதனை எதிர்கொள்ளும்போது மனிதர்கள் மேற்கொள்ளும் மனவோட்டங்கள் எப்படி இருக்கும்? கடவுள், குற்றம், தண்டனை போன்றனவெல்லாம் எங்கே இருக்கிறது? மனத்திற்குள்ளேயே இருக்கின்றனவா வெளியிலா? என்பன போன்ற கேள்விகளைக் கரடுமுரடான தொலைக்காட்சி அலறலோடு காட்சிகளின் பின்னணி இசையாக ஆக்கியிருப்பது இயக்குநரின் தேர்வு. அதற்காக மொத்தத் தமிழ்ச்சினிமா பரப்புக்குள்ளும் தேடியிருக்கிறார்கள் இயக்குநரும் வசனம் எழுதியவரும். காமிராவின் காட்சிப்படுத்தலோடு பார்வையாளர்கள் ஒன்றிவிடக் கூடாது என்பதற்குப் பலவித உத்திகள் கலைத்தன்மை கொண்ட சினிமாக்கள் பயன்படுத்தியுள்ளன. ‘நண்பகல் நேரத்து மயக்கம்’ படத்தின் இயக்குநர், இசைக்கோலங்களின் மிகையால் அதனைச் செய்திருக்கிறார்; பாராட்டுகள்.

## கலைத்தன்மை உருவாக்கங்கள்

பொதுவாகப் பேசுவதற்குப் பதிலாகக் குறிப்பாகப் பேசுவதைக் கலைத்தன்மை சினிமாக்கள் முக்கியமான வேறுபாடாகக் கொள்கின்றன என்று தொடக்கத்தில் சொல்லியிருக்கிறேன். அதல்லாமல் நாயகத்தனம் - வில்லத்தனம் என்பதை முக்கியமான எதிர்வாகக் கலைத்தன்மைப் படங்கள் கருதுவதில்லை. அக்குணங்கள் கொண்ட மனிதர்கள் தனித்தனியாக இருப்பதாகக் கருதாத நிலையில் அவ்வகை எதிர்வுகளை முன்வைப்பதில்லை. அதே நேரம் எதிர்வுகளையே உருவாக்குவதில்லை என்று உறுதியாக இருப்பதும் இல்லை. எதிர்வுகள் இல்லாமல் இந்த உலகத்தின் இருப்பையும் நடப்பையும் புரிந்துகொள்ள இயலாது. அதனால் ஒரு சினிமாவுக்குத் தேவையான எதிர்வுகளை உருவாக்கி விசாரணை நடத்துவதைக் கலைத்தன்மைப் படங்கள் மறுதலிப்பதில்லை. ‘நண்பகல் நேரத்து மயக்கம்’ அதன் கட்டமைப்புக்குள் வெளிப்படையான சில எதிர்வுகளை வைத்திருக்கிறது. சில மறைமுக எதிர்வுகளையும் கொண்டிருக்கிறது. படம் உருவாக்கியுள்ள முதன்மையான எதிர்வு காணாமல் போனவனும் காணாமல் போய்க்கொண்டிருப்பவனும் உருவாக்கும் மனத்தவிப்புகள். காணாமல் போனவன் என்னும் கடந்த காலத்தவிப்பையும் காணாமல் போய்க்கொண்டிருப்பவன் உருவாக்கும் நிகழ்காலத் தவிப்பையும் ஒருசேரக் காட்சிப்படுத்தியதில் பார்வையாளர்களை வென்றிருக்கிறார் இயக்குநர் பெல்லிசேரி. இந்தத் தவிப்பின் ஊடாக இந்தியச் சமயங்கள் முன்வைக்கும் சமயம் சார்ந்த தத்துவ விசாரணையின் ஓரடுக்கை விவாதிக்க முயன்றுள்ளார். பார்க்கவேண்டிய படம். பார்த்து விவாதிக்கவேண்டிய படம்.

“அ. ராமசாமி” <ramasamytamil@gmail.com>

# அச்சுறுத்தும் தண்ணீர் நெருக்கடி!

பிரபு திலக்

ஐக்கிய நாடுகள் சபை சமீபத்தில் வெளியிட்டுள்ள அறிக்கையில், “உலக நாடுகள் ஓர் ஆபத்தான பாதையில் பயணிக்கின்றன. நுகர்வுக் கலாச்சாரம், காலநிலை மாற்றம், அதிதீவிர வளர்ச்சியினால் தண்ணீர் நெருக்கடி ஏற்படும் அபாயம் உள்ளது. அதிகப்படியான நுகர்வு மற்றும் மாசுபாட்டின் காரணமாக நீர் பற்றாக்குறை அதிகரித்து வருகிறது. அதே சமயம் காலநிலை மாற்றங்களும் புவி வெப்பமடைதலை அதிகரித்து நீர் பற்றாக்குறையை தீவிரமாக்கி வருகின்றன. ஆண்டுக்கு 300 கோடி மக்கள் நீர் நெருக்கடியில் வாழ்கின்றனர்” என்று தெரிவிக்கப்பட்டுள்ளது.

இது தொடர்பாக ஐ.நா.வின் பொதுச் செயலார் அண்டோனியா குத்தரெஸ் கூறும்போது, “மனித குலத்தின் உயிர் நாடியான நீர், மாசினாலும் காலநிலை மாற்றத்தினாலும் தூர்ந்துபோய் வருகிறது” என்று வேதனையுடன் தெரிவித்துள்ளார்.

உலகம் முழுவதும் பருவநிலை தாறுமாறாகச் சீர்குலைந்து கிடப்பதன் காரணமாக, ஒரு பக்கம் வறட்சியின் கோரப்பிடி, இன்னொரு பக்கம் வரலாறு காணாத மழை என திகைத்துத் தடுமாறுகின்றன நாடுகள். தமிழ்நாட்டில், கடந்த 146 ஆண்டுகளில் இல்லாத அளவுக்கு இந்த ஆண்டு பிப்ரவரி மாதம் அதிக அளவு வெப்பநிலை காணப்பட்டதாக சென்னை வானிலை ஆய்வு மையம் தெரிவித்துள்ளது குறிப்பிடத்தக்கது. 1901க்குப் பிறகு 2006 பிப்ரவரியில் 29.31குசி, 2016 பிப்ரவரியில் 29.48குசி பதிவானதே இதற்குமுன் பதிவான அதிகபட்ச சராசரி வெப்பநிலையாக இருந்திருக்கிறது. இந்த பிப்ரவரி மாதம் பதிவான வெப்பநிலை 29.54 டிகிரி செல்சியஸாக உள்ளது. இதுவே இதுவரை இருந்த பிப்ரவரி வெப்பநிலையில் அதிகபட்சமாகும். நாட்டின் பல்வேறு பகுதிகளில், வழக்கத்திற்கு மாறாக வெப்பநிலை உயர்ந்துள்ள நிலையில், முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் மேற்கொள்ள மாநிலங்களுக்கு மத்திய அரசு அறிவுறுத்தியிருந்தது குறிப்பிடத்தக்கது. காரணம், பூமியின் வெப்பநிலை அதிகரித்து வருவது வெயில், மழை அளவுகளை தாறுமாறாக மாற்றமடையச் செய்வதுடன் மோசமான பாதிப்புகளையும் ஏற்படுத்தும்.



பூமி வெப்பமடைவதை மனிதனுக்குக் காய்ச்சல் வருவதோடு ஒப்பிடலாம். மனித உடலின் சராசரி வெப்பநிலை 98.4 டிகிரி பாரன்ஹீட். இதற்கு மேலே சென்றால் காய்ச்சல் என்கிறோம். அதுவே 101, 102, 103 என்று உயரும்போது கடுமையான காய்ச்சல் ஆகிறது. உடலின் அதிக வெப்பநிலை மனிதனின் சராசரி இயக்கத்தைத் தடுக்கும். உடல்வலி கடுமையாகும். கட்டுப்படுத்த முடியாத காய்ச்சல் மரணத்தை வரவழைக்கலாம். இதேபோன்றுதான் பூமியும்.

பூமியின் சராசரி வெப்பநிலை 15 டிகிரி செல்சியஸ். பூமியின் நிலநடுக்கோட்டுப் பகுதியில் கூடுதலாகவும், துருவப் பகுதிகளில் குறைவாகவும் இருந்தாலும் ஒட்டுமொத்த சராசரி வெப்பம் 15 டிகிரி செல்சியஸ் என்று கணக்கிடப்பட்டுள்ளது. இதனைவிட வெப்பநிலை அதிகரிக்கும்போது பூமியின் நிலை மோசமாகும். ஆனால், 15 டிகிரி செல்சியஸை நாம் கடந்து நிறைய நாட்கள் ஆகிவிட்டது. அது மேலும் மேலும் அதிகரித்துக்கொண்டே வருவதன் விளைவுகள்தான் தற்போதைய தாறுமாறான பருவநிலை மாற்றங்கள்.

பூமியின் வெப்பநிலை இப்படி அதிகரித்திருப்பதற்குக் காற்று வெளியில் நாம் ஏற்படுத்திருக்கும் மாசுக்கள்தான் காரணம் என்கிறார்கள் விஞ்ஞானிகள். பூமியை வட்டமாகக் கண்ணுக்குத் தெரியாத ஒரு போர்வை போலக் காற்றுவெளி மண்டலம் சுற்றியிருக்கிறது. இதனை விஞ்ஞானிகள் கிரீன் ஹவுஸ் வாயுக்கள் என்கிறார்கள். பூமியின் வெப்ப



அளவு அதிகரிப்பதால் மட்டுமல்ல குறைந்தாலும் பிரச்சினைதான். பூமியைச் சுற்றியிருக்கும் கோள்களில் மைனஸ் 14 டிகிரி செல்சியஸ் குளிர் உள்ளது. இந்தக் குளிரில் இருந்தால் நம் நிலை என்னவாகும்? கருகி கருவாடு ஆகிவிடுவோம். மற்ற கோள்களில் உள்ளது போல் மைனஸ் டிகிரியில் குளிர் செல்லாமல், பூமியின் வெப்ப அளவை சமச்சீராக வைத்திருப்பதில், கிரீன் கவுஸ் வாயுக்கள் முக்கியப் பங்காற்றுகின்றன.

பூமி, தன் மீது விழும் சூரிய வெப்பத்தை மீண்டும் விண்வெளிக்கே திருப்பி அனுப்பும். இது கிரீன் ஹவுஸ் வாயு மண்டலம் வழியாக விண்வெளிக்குக் கடத்தப்படும். இப்படிக் கடத்தப்பட்டு விட்டால் ஒரு பிரச்சினையும் இல்லை. இது நடந்தால் சாயங்காலம் ஆனதும் வெப்பக் காற்று குறைந்துவிடும். இரவு 9 10 மணி ஆகும்போது குளிரத் தொடங்கிவிடும். ஆனால், இன்று நிலமை தலைகீழாகிவிட்டது.

கார்பன் டை ஆக்சைட், நைட்ரஸ் ஆக்சைட், மீத்தேன், குளோரா புளோரா கார்பன் ஆகிய வாயுக்கள்தான் கிரீன் ஹவுஸ் வாயுக்கள். இவ்வாயுக்கள் காற்று வளி மண்டலத்தில் அதிகரித்ததன் காரணமாக, பூமியில் இருந்து திரும்ப அனுப்பப்படும் வெப்பத்தை உள்வாங்கி, தேக்கி வைக்கிறது. இதனால், வாயுமண்டலம் வெப்பமாகிறது. இதன் விளைவாக, பூமியின் வெப்பநிலை அதிகரிக்கிறது.

15 டிகிரி செல்சியஸ் என்ற சராசரி வெப்ப நிலையைவிட இன்று 27 சதவிகிதம் அதிகமாகிவிட்டது. நடு இரவு ஆகியும் வெப்பச் சலனம் உள்ளதற்கு இதுதான் காரணம். அதிகரித்துள்ள வெப்பத்தை ஏசி போன்ற கண்டுபிடிப்புகள் மூலம் மனிதன் சமாளிக்கிறான். விலங்குகள், தாவரங்கள் உட்பட்ட மற்ற உயிரினங்கள் என்ன செய்யும்? காட்டில் யானைகள் ஈர மண்ணை வாரி தன் மீதே கொட்டுகிறது. ஆனால், இப்படி யானைகளால் எத்தனை வருடங்கள் சமாளிக்க முடியும்? இப்போதே பல உயிரினங்களும் தாவரங்களும் வெப்பத்தைத் தாக்குபிடிக்க முடியாமல் அழிந்துவிட்டன. பல அழிந்து வருகின்றன.

பூமியின் வெப்பநிலை அதிகமாவதற்குப் பெருமளவு காரணம் நாம் பயன்படுத்தும் பெட்ரோலியப் பொருட்கள், நிலக்கரி உட்பட்ட எரிசக்தியும் காடுகள் அழிக்கப்படுவதும்தான் என்பது விஞ்ஞானிகள் முடிவு. நிலக்கரி, பெட்ரோல் எரிபொருள்கள் எரிக்கப்படும் போது கரியமில வாயு வெளியாகிறது. காடுகளை அழிக்கும் போது மித்தேன் வாயுக்கள் வெளியாகிறது. நைட்ரஜனை அடிப்படையாகக் கொண்ட உரங்களை அதிகளவில் பயன்படுத்தும் போது நைட்ரைட் ஆக்சைட் போன்ற வாயுக்கள் உற்பத்தியாகிறது. இப்படி இயற்கைக்கு மாறாக அதிக அளவு உற்பத்தியாகும் கார்பன் டை ஆக்சைடு, மீத்தேன், நைட்ரஸ் ஆக்சைட், குளோரா புளோரா கார்பன் போன்ற வெப்ப வாயுக்கள் காற்று வளி மண்டலத்தில் அதிகமாகி பூமி திருப்பி அனுப்பும் வெப்பத்தைத் தடுக்கின்றன.

எனவே, இந்த நான்கு வாயுகளை எவ்வாறு கட்டுப்படுத்தப்படுத்துவது என்பதுதான் இன்று நம் முன் உள்ள சவால். இன்றைய நிலையில் உலகின் ஒட்டு மொத்த எரிசக்தித் தேவை நிலக்கரி, பெட்ரோலியப் பொருள்கள் மற்றும் எரிவாயுக்களின் மூலமே நிவர்த்திச் செய்யப்படுகிறது. இந்த மூன்றின்

பயன்பாடும் இல்லாத உலகத்தை நம்மால் கற்பனை செய்துகூட பார்க்க முடியாது என்பதுதான் நிஜம். ஆனாலும், இவற்றை இப்பொழுது பயன்படுத்துவது போலத் தொடர்ந்தும் நாம் பயன்படுத்தினால் உலகின் எதிர்காலமே கேள்விக்குள்ளாகும் என்பதும் நிதர்சனம்.

பூமி சூடாவதன் பாதிப்புக்கள் முதலில் கடலில் தெரிந்தது. பூமியின் தென் துருவத்திலுள்ள அண்டார்டிகா கண்டத்தின் பனிப் படலம் மொத்தத்தையும் மதிப்பீடு செய்துள்ள ஆய்வு ஒன்று, பூமி வெப்பநிலை அதிகரிப்புக் காரணமாக, தற்போது ஒவ்வொரு ஆண்டும் 160 பில்லியன் டன்கள் எடையளவுக்கு இக்கண்டம் பனிக்கட்டியை இழந்துவருகிறது என்று தெரிவித்துள்ளது. ஒரு சில நூற்றாண்டுகளில் அங்குள்ள பனி மொத்தமும் உருகலாம் எனவும் அஞ்சப்படுகிறது. "அது நிகழ்ந்தால் உலகத்தில் கடல் மட்டம் ஒரு மீட்டருக்கும் அதிகமாக உயர்ந்துவிடும்" என அமெரிக்க விண்வெளி ஆய்வு நிறுவனமான நாஸா தெரிவித்திருந்தது. இதனால், சிறு தீவுகளும் கடற்கரையை ஒட்டிய நகரங்களும் நீரில் மூழ்கும். வெப்பமடையும் போது தண்ணீர் விரிவடையும் தன்மை கொண்டது. அதனாலும் கடல் நீர்மட்டம் அதிகரிக்கும். கடல் நீர் மட்டம் அதிகரிக்கும் போது அவற்றில் ஏற்படும் புயல்களின் தீவிரமும் அதிகரிக்கும்.

'பருவநிலை மாற்றத்தால், இந்தியாவில் 2030ஆம் ஆண்டு 10 சதவீதம் அளவுக்கு அரிசி உற்பத்தி குறையும்; அடுத்த 20 ஆண்டுகளில் 20 லட்சம் லிட்டர் பால் உற்பத்தியை இழக்க நேரிடும். இந்த நூற்றாண்டின் இறுதியில் 48 சதவீதம் உணவு தானிய உற்பத்தி குறையும். கடல் நீர் வெப்பநிலை அதிகரித்துள்ளதால் கடல் பகுதியில் இருந்த மீன்கள் வேறு பகுதிக்கு இடம் பெயர்ந்துள்ளன. எனவே, மீன்கள் கிடைப்பதும் தடைபடும். இன்றைய சூழலில் ஒரு டிகிரி செல்சியஸ் வெப்பம் உயர்ந்தால், 50 லட்சம் டன் கோதுமை உற்பத்தியை இழக்க நேரிடும்' என்கின்றன புள்ளிவிபரங்கள்.

ஆறு கோடி ஆண்டுகளுக்கு முன் எரிகற்கள் விழுந்ததில் பூமியின் 96 சதவிகித உயிரினங்கள் மொத்தமாக அழிந்தன. இன்று நாம் சினிமாவில் மட்டும் பார்க்கும் டைனோசர்கள் அழிந்தது அப்போதுதான். அதற்கடுத்து அதுபோன்ற ஒருபெரும் அழிவுக்கான அச்சுறுத்தலாகப் பார்க்கப்படுகிறது பூமியில் வெப்பநிலை அதிகரிப்பது. டைனோசர் கதை விரைவில் யானைக்கு நிகழலாம் என்கிறார்கள்.

எனவே, இதற்கு மாற்று வழிகளை நாம் கண்டுபிடித்தே ஆகவேண்டும். இப்போதுஉடனடியாக எரிசக்தி சிக்கனம், ஜீரோ கார்பன் எனர்ஜி, கார்பனை உட்கொள்ளுதல், குப்பைகள் மேலாண்மை ஆகிய நான்கு வழிகளையும் நாம் செய்தே ஆகவேண்டும்.

உலகம் முழுக்க இந்தியா உட்பட பல்வேறு நாடுகளும் பருவநிலை மாற்ற விஷயத்தில் கவனம் செலுத்தி தீவிரமாகச் செயல்பட்டு வருகின்றன. ஆனால், "நாடுகள் பங்களிப்புடன் தனி மனிதர்களின் பங்களிப்பும் முக்கியமானது" என்கிறது ஐ.நா. சபை. தனிமனிதர்களான நம்மால் என்ன பங்களிப்புச் செய்ய முடியும்?

சின்ன சின்ன விஷயங்கள்தான்..

சிக்னலில் நிற்கும் போது வாகன என்ஜினை ஆஃப் செய்து வைப்பதன் மூலம் பெட்ரோலியப் பொருட்கள் எரிப்பதை குறைக்கலாம். வீட்டில், அலுவலகத்தில் தேவையில்லாமல் எரியும் லைட்களை ஆஃப் செய்வது, குறைவான வோல்டேஜ் LED லைட்களைப் பயன்படுத்துவது போன்றவை மூலம் மின்சாரப் பயன்பாட்டைக் குறைக்கலாம். தேவைப்படாத நேரங்களில் மின்சாதனங்களை அணைத்துவிட வேண்டும். இதனால், மின்சாரத் தயாரிப்புக்காக நிலக்கரி எரிக்கப்படுவது குறையும்.

நம்மால் முடிந்தளவு மரங்கள் நடலாம். ஒரு மரம் 4 கிலோ கார்பன் டை ஆக்சைடை உட்கொள்ளும். 4 கிலோதானே என நினைக்காதீர்கள். 4 கிலோ கார்பன் டை ஆக்சைட் என்பது உங்கள் பெட்ரூமில் பாதி இடத்தை அடைத்துக் கொண்டிருக்கும்.

மக்கும் குப்பை, மக்காத குப்பை எனக் குப்பையைப் பிரித்து மேலாண்மை செய்வதன் மூலம் மீத்தேன் வாயுக்கள் உற்பத்தியாவை தடுக்கலாம். காகித பயன்பாட்டைக் குறையுங்கள். இன்று பல விஷங்களுக்கு பிரிண்ட் அவுட் அவசியமில்லை. அவசியமானாலும், தாளின் இரண்டு பக்கமும் பயன்படுத்துங்கள்.

காற்றாலை மின்சாரம், சூரிய சக்தி மின்சாரம், பயோ டீசல் போன்றவை பயன்பாட்டின் மூலம் ஜீரோ கார்பன் எனர்ஜிக்குப் பங்காற்றலாம். அருகிலுள்ள இடங்களுக்குச் செல்லும்போது சைக்கிளிலோ நடந்தோ செல்லலாம்.

முக்கியமாக பிளாஸ்டிக் பொருட்கள் பயன்பாட்டைத் தவிர்க்கலாம். கடைகளுக்குச் செல்லும் போது ஒரு பையுடன் செல்லுங்கள். பாலிதின் பொருட்கள் எரிக்கப்படும்போது உருவாகும் கார்பன் டை ஆக்சைட்தான் பூமியின் வெப்பநிலையை அதிகரிப்பதில் முதலிடம் பிடிக்கிறது.

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.**

**Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**
**Editor : PRABHU THILAAK**

